**கவற்சி** - மனோவிசாரம், மனவருத்தம்
**கவற்றி** - கவற்சி, விருப்பம்
**கவற்றுதல்** - கவலையுறச் செய்தல்
**கவற்றுமடி** - பட்டாடைவகை
**கவனம்** - போர் நடை கலக்கம், ஐயம், மருந்து, வேகம், காடு
**கவனன்** - வேகமுடையான்
**கவனித்தல்** - கருத்தூன்றி அறிதல்
**கவனிப்பு** - கருத்தூன்றுகை
**கவாஅன்** - களவன்
**கவாடம்** - கதவு, ஒரு ஆள் சுமக்கக்கூடிய விறகு அல்லது வைக்கோற் பொதி
**கவாத்து** - போர்வீரர் செய்யும் தேகப் பயிற்சி
**கவாலி** - சிவன்
**கவாளம்** - காயக்கட்டு
**கவான்** - தொடை, மலைப்பக்கம், திரள்
**கவான்செறி** - தொடையில் அணியும் ஓர் ஆபரணம்
**கவி** - பாவலன், பாட்டு, ஞானி, சுக்கிரன், குரங்கு, பூனைக்காலி
**கவிகண்ணோக்கு** - புருவத்துக்கு அருகாகக் கையைக் கவித்துக் கொண்டு பார்க்கும் பார்வை
**கவிகம்** - கடிவாள இரும்பு
**கவிகூற்று** - நூலுள் தன் கருத்தாகக் கவிகூறும் கூற்று
**கவிகை** - குடை, நன்மை தீமை, கொடை
**கவிக்கடை** - பனிச்சை
**கவிசனை** - உறை, சேணம்
**கவிஞன்** - பாவலன், சுக்கிரன்
**கவிதல்** - மூடுதல், வளைதல், கருத்தூன்றுதல்
**கவித்தல்** - வளைந்துமூடுதல், சூட்டுதல்
**கவிதை** - பாடல்
**கவித்தம்** - விளா, கைம்முட்டி, அபிநயவகை
**கவித்தல்** - சூட்டுதல், வளைந்துமூடுதல்
**கவிநாதன்** - புலவருள் சிறந்தவன்
**கவிப்பர்** - ஒரு வணிக குலத்தினர்
**கவிப்பு** - குடை, மூடுகை, மனம்பற்றுகை
**கவியம்** - கடிவாளம்
**கவியரங்கேறுதல்** - நூல் ஏற்றுக்கொள்ளப்படுதல்
**கவிரம்** - அலரி, தேவவிருட்சம்
**கவிராசபண்டிதர்** - சௌந்தரிய லகரியை இயற்றிய புலவர்
**கவிர்** - முள்முருக்கை
**கவிவாணர்** - செய்யுள் செய்யும் புலவர்
**கவிழ்தல்** - தலைகீழாதல், தலைஇறங்குதல், நிலைகுலைதல், அழிதல்
**கவிழ்த்தல்** - கவிழச்செய்தல், கெடுத்தல், ஒழுகவிடல்
**கவினுதல்** - அழகுறுதல்
**கவின்** - அழகு
**கவீரம்** - அலரி
**கவுசனை** - உறை, சேணம்
**கவுசி** - ஒருவகை வரிக்கூத்து, பாட்டு, ஒருவகை நோய்
**கவுசிகம்** - வெண்பட்டு, கோட்டான், ஒருபண், சாமவேதம், விளக்குத் தண்டு
**கவுசிகன்** - விசுவாமித்திரன்
**கவுஞ்சவியூகம்** - அன்றில்போல வகுக்கும் அணிவகுப்பு
**கவுடமாய்** - பொருள் வெளிப்படையின்றி மறைந்து
**கவுடம்** - வங்காளத்திலுள்ள கௌடநாடு, கொடிவகை
**கவுடி** - ஒருபண், கவடி
**கவுணம்** - ஒருவகைத் திருநீறு
**கவுணி** - கவுணியன்

**கவுணியன்** - கவுண்டினிய கோத்திரத்தான்

**கவுண்டன்** - சண்டாளன், தமிழர் சிலருக்கு வழங்கும் பட்டப்பெயர்

**கவுதகம்** - மீனகோதகி

**கவுதாரி** - ஒரு பறவை

**கவுதாரிபுடம்** - கவுதாரி அளவாக மூன்று எருவிட்டெரிக்கும் மருந்து புடம்

**கவுத்துவம்** - திருமால் மார்பிலணியும் மணி

**கவுந்தி** - தவப்பெண், சைனதவப்பெண், குந்திதேவி

**கவுமாரம்** - இளமை

**கவுமோதகி** - திருமாலின் தண்டாயுதம்

**கவுரம்** - வெண்மை

**கவரிசங்கம்** / **கவுரிசங்காம்** } சிவன் உமை என்பவர்களது உருவினதாய் இரு பிளவுபட்ட ஒற்றை உருத்திராக்கம்

**கவுள்** - கன்னம், யானையின் கன்னம், யானையின் உள்வாய், ...க்கம்

**கவுளி** - பல்லி

**கவேரகன்னி** - கவேரன் மகளாகிய காவிரி ஆறு

**கவேரவனம்**-கவேரமுனிவர் வசித்த வனம்

**கவேரன்** - ஓர் இருடி

**கவை** - கவர், மரக்கிளை, கவர்வழி, அகில, காரியம, எள்ளின்காய், ஆயிலியம்

**கவைக்கோல்** - கவரானகழி, குத்துக்கோல்

**கவைத்தாம்பு** - தாமணியையுடைய கயிறு

**கவைமுட்கருவி** - யானையை அடக்கும் குத்துக்கோல்

**கவையடி** - பிளவுபட்ட அடி

**கவ்வயமா** - காட்டுப்பசு

**கவ்வம்** - மத்து

**கவ்வாணம்** - தமிழ்ச்சி...மூ ... ...கொண்டு

**கவ்வியம்** - பசுவினின்று எடுக்கும் ஐந்து பொருளையுந் தருவது

**கவ்வு**-வாயால் கவ்வுகை, பிடிக்கை

**கவ்வுதல்** - வளவுதல்

**கவ்வை** - ஒலி, பழிச்சொல், துன்பம், கவலை, பொறாமை, கள், காரியம், எள்ளிளங்காய், ஆயிலியம்

**கழகண்டு** - குறும்பு, தீம்பு

**கழகம்** - ஓலக்கம், சபை, கல்வி பயிலுமிடம், படைக்கல முதலிய பயிலுமிடம், சூது

**கழங்கம்** - சூதாடுகருவி

**கழங்காடல்** - பெண்கள் ஆடும் கழற்சிக்காயாட்டம்

**கழங்கிட்டுரைத்தல்**-கழற்சிக்காயால் குறியறிந்து சொல்லுதல்

**கழங்கு** - கழற்சிக்காய், கழற்சி விளையாட்டு, சூது, கழற்சிக்காயைக்கொண்டு வெறியாட்டில் வேலன் சொல்லும் குறி

**கழங்குபடுத்தல்** - கழங்குகொண்டு குறியறிதல்

**கழங்குமெய்ப்படுத்தல்** - பகைவரை அழிக்காதபடி புலிபோல் செய்துவைக்கும் உருவுக்குக் கழற்சிக்காயைக் கொண்டு அமைத்தல், கழங்கால் குறியறிதல்

**கழஞ்சு** - ஓர் எடுத்தலளவை—$\frac{1}{6}$ அவுன்சு

**கழப்பு** - சோம்பல்

**கழலுதல்** - நெகிழ்ந்துபோதல், நீங்குதல், பிதுங்குதல், விழுதல்

**கழலை** - சதைக்கட்டி

**கழினி** - இடுநிரை
**கழு** - கழுமரம், சூலம், பசுவைக் கறப்பதற்கு அதன் கழுத்தில் மாலைபோல கட்டிவிடும் கழி, கழுகு
**கழுகு** - ஒரு பறவை
**கழுகப்பொறி** - ஒரு மதிற்பொறி
**கழுக்கடை** - சிறிய ஈட்டி, சூலம்
**கழுக்காணி** - அறிவற்ற மடையன், உலக்கை, வேங்கைமரம், தாமரை
**கழுக்கோல்** - கழு மரம்
**கழுதிரதம்** - பேய்த்தேர்
**கழுது**-பேய், காவற்பரண், வண்டு
**கழுதைப்புலி** - கழுதைபோல் வடிவமுள்ள கடுவாய் விலங்கு
**கழுத்து**-கண்டம், கலத்தில் பானை முதலியன வைத்தேற்ற இடம்
**கழுநர்** - அழுக்கைக் கழுவுவோர்
**கழுநீர்** - செங்குவளை, மலர், நீலோற்பலமலர், அரிசிகழுவிய நீர், தீர்த்தநீர்
**கழுந்தன்**-பகுத்தறிவுமழுங்கினவன்
**கழுந்து** - உலக்கை, வில் முதலியவற்றின் திரண்ட நுனி, மூட்டுக்குளம்
**கழுமணி** - சுத்தம் செய்யப்பட்ட மணி
**கழுமம்** - குற்றம்
**கழுமல்** - மயக்கம், பற்றுகை
**கழுமலம்** - உயிர்களின் மலத்தைப் போக்கும் சீகாழி, சேரநாட்டுள்ள ஓர் ஊர்
**கழுமுதல்** - சேர்தல், திரளுதல், கலத்தல், மிகுதல், மயங்குதல்
**கழுமுள்** - ஆயுதம், மாதுளை
**கழுவாய்** - பிராயச்சித்தம்
**கழை** - மூங்கில், வேய்ங்குழல், ஓடக்கோல், குத்துக்கோல், கரும்பு, புனர்பூசம்
**கழைக்கூத்தன்** - மூங்கில்மேல் நின்று கூத்தாடி
**கழைநெல்** - மூங்கில்நெல்
**களகண்டம்** - குயில்
**களகம்** - பெருச்சாளி, நெற்கதிர், சுண்ணாம்புச்சாந்து, [illegible]
**களகம்பளம்** - எருத்தின் அலைதாடி
**களகளப்பு** - பேரொலி
**களகளம்** - களகளப்பு
**களக்கம்** - குற்றம்
**களங்கம்** - மறு, குற்றம், கரு, களிம்பு, வயிரக் குற்றத்துள் ஒன்று, நிலம், அடையாளம்
**களங்கன்** - சந்திரன்
**களங்கு** - களங்கம்
**களங்கொள்ளுதல்** - இருப்பிடமாகுதல்
**களஞ்சம்** - கஞ்சா முதலிய வெறிப் பண்டங்கள்
**களஞ்சியம்** - பண்டசாலை
**களத்திரகாரகன்** - சுக்கிரன்
**களத்திரத்தானம்** - இலக்கினத்திற்கு எட்டாமிடம்
**களத்திரம்** - மனைவி
**களபம்**-சுண்ணச்சாந்து, கலவைச்சாந்து, யானைக்கன்று, யானை
**களப்பலி** - போர்க்களத்தில் காளிக்குக் கொடுக்கும் பலி
**களப்பு** - கடலில் ஆழமில்லாத இடம்
**களமர்** - மருதநிலமக்கள், வீரர், அடிமைகள்
**களமாலை** - ஒரு நோய்
**களம்** - இடம், நெற்களம், சபை, போர்க்களம், உள்ளம், இருள், மேடை, மனைவி, தொண்டை, விடம்
**களம்பழம்** - களாவின்பழம்
**களம்வேட்டல்** - பகைப்படையைக் கொன்று பேய்க்கு விருந்தூட்டுதல்

களிற்றுப்பொறி - மதிற்பொறிகளுள் ஒன்று
களுசி - சிற்றில் கொடி
களேபரம் } உடம்பு, எலும்பு,
களேவரம் } பிணம்
களை - பயிர் வளர்தற்குத் தடையாக வளரும் புல் முதலியன, குற்றம், அடர்வு, சந்திரகலை, அழகு
களைகட்டல் - களைபறித்தல்
களைகண் - பற்றுக்கோடு
களைக்கோல் - களைபறிக்கும் கருவி
களைஞன் - களைபறிப்போன்
களைப்பு - சோர்வு
களைபறித்தல் - களைபிடுங்குதல்
களைவு - நீக்குகை
கள் - களவு, மது, தேன், வண்டு, பன்மை விகுதி, அசைநிலை
கள்வம் - திருட்டுச் செயல்
கள்வன் - திருடன், நண்டு, கர்க்கடகம், யானை
கள்விலையாட்டி - கள் விற்பவள்
கள்ள - ஓர் உவம உருபு
கள்ளப்பூமி - பகைவரை அகப்படுத்த உள்ளிட்ட படுகுழியாய் மேலிடம் தரைபோல அமைக்கப்பட்ட நிலம்
கள்ளம் - வஞ்சனை, பொய், களவு
கள்ளவேடம் - பொய்வேடம்
கள்ளழகர் - கள்ளர் நாட்டிலுள்ள அழகர் மலையிற் கோயில் கொண்ட திருமால்
கள்ளன் - திருடன்
கள்ளாட்டு - களியாட்டு
கள்ளி - செடிவகை, திருடி
கள்ளிப்புறா - சவிட்டுப் புறா
கள்ளிப்பூ - ஒருவகை ஆபரணம்
கள்ளிமுளையான் - கள்ளிமந்தாரை
கள்ளில் - கள், கட்கடை
கறகற - ஓர் ஒலிக்குறிப்பு
கறகறத்தல் - ஒலித்தல்
கறங்கல் - ஒலிக்கை, சுழற்சி, வட்டமிடுதல்
கறங்கு - காற்றாடி, சுழற்சி, சத்தம்
கறங்குதல் - ஒலித்தல், சுழலுதல்
கறங்கோலை - ஓலைக்காற்றாடி
கறடிகை - ஓர் ஆபரண உறுப்பு
கறடு - [illegible]
கறண்டிகை - முடியுறுப்புள் ஒன்று
கறம் - கொடுமை
கறல் - விறகு
கறவு - கப்பம்
கறவை - பசு
கறவைக்கலம் - பால் கறக்கும் கலம்
கறி - மிளகு, கடித்துத் தின்னுகை, கறிவகை
கறித்தல் - கடித்துத் தின்னுதல்
கறிவேம்பு - கறிவேப்பிலை மரம்
கறு - மனவைரம்
கறுக்காய் - இளநீர்க்காயின் கண் பக்கத்துள்ள பகுதி
கறுத்தல் - கருமையாதல், முறுகல், கோபித்தல்
கறுத்தோர் - பகைவர்
கறுப்பு - கருமை, வெகுளி, குற்றம், கறை, தழும்பு, இராகு
கறுப்புதல் - துன்புறுத்தல்
கறுவு - சினம்
கறுவுதல் - சினக்குறிப்புக் காட்டுதல், மனவைரங்கொள்ளுதல்
கறுழ் - கடிவாளம்
கறேலெனல் - மிகக் கறுப்பாதற் குறிப்பு
கறை - மாசு, குற்றம், கறுப்பு நிறம், விடம், இரத்தம், மாதவிடாய், உரல், குடியிறை
கறைக்கண்டன் - கழுத்தில் கருநிறம் உள்ள சிவன்
கறைபோக்கி - சவர்க்காரம்
கறைமிடற்றண்ணல் - சிவன்
கறையடி - உரல் போல் அடி உடைய யானை

கறையான் - சிதல், செல்லு
கறையோர் - வரிசெலுத்துவோர்
கற்கசம் : கடினம், உலோபம், வேலிப் பருத்தி
கற்கசன் - வன்னெஞ்சன்
கற்கடகம் - அபிநயவகை
கற்கண்டு - கருப்பஞ்சாற்றுக்கட்டி
கற்கந்து - சுறறாண
கற்கலை - காவிமண்ணில் தோய்த்த ஆடை
கற்கவி - சுதவு நிலையின் மேலே இடப்பட்டிருக்கும் பாவுகல்
கற்கா - கற்காநாடு
கற்காண்டல் - போரிட்ட வீரனது உருவம் வகுப்பதற் கேற்ற சிலையைத் தெரிந்து கொள்வதைக் கூறும் புறத்துறை
கற்காநாடு - செந்தமிழ் நாட்டைச் சூழ்ந்த பன்னிரண்டுநாடுகளுள் ஒன்று
கற்காரு - அகில்
கற்காவி - காவிக்கல்
கற்கி - கோயில், திருமாலின் பத்தாவது அவதாரம், குதிரை
கற்குரு - கற்பூர சிலாசத்து
கற்குளிமாக்கள் - மூத்துக் குளிப்போர்
கற்கை - படிக்கை
கற்கோணிலை - போரிலபட்ட வீரனது உருவைப் பொறிப்பதற்குத் தெரிந்துகொண்ட கல்லைக் கைக்கொள்ளுதலைக் கூறும் புறத்துறை
கற்சிறை - கல்லணை
கற்சிறபர் - கல்தச்சர்
கற்பகச்சோலை - இந்திரனதுபூங்காவனம்
கற்பகநாடு - தேவருலகம்
கற்பகம் - ஐந்தருக்களுள் ஒன்று, தென்னை
கற்பகவல்லி - காமவல்லி
கற்படுத்தல் - கற்பதித்தல்
கற்படை - கல்பதித்த இடம், கற்களால மறைத்து மூடிய சுருங்கை, கோட்டையின் கள்ளவழி
கற்பணம் - கைவேல்
கற்பம் - 432 கோடி, பிரமனுடைய ஆயுள், நீட்சிக்கு மருந்து, திருநீறு
கற்பனை - கல்வி, போதனை, சங்கற்பம், கட்டளை, இல்லாததைக் கட்டிச் சொல்லுதல், கபடம், மாயை
கற்பா - கோட்டை உளமதிலின வாரியுள உயர்ந்த நிலம்
கற்பாட்டி - கற்புடையவள்
கற்பாந்தம் - ஊழி முடிவு
கற்பாழி - மலைக்குகை
கற்பாள் - மனைவி
கற்பித்தல் - போதனை செய்தல், கட்டிச்சொல்லுதல்
கற்பிதம் - பொய்
கற்பியல் - கற்பொழுக்கத்தைப் பற்றிக் கூறும் அகத்திணைப் பகுதி
கற்பு - பதிவிரதாதருமம், தலைவன் தலைவியைப் பலரறிய மணந்து இல்லறம் புரிதல்,முல்லை, கலவி தியானம், வேலைப்பாடு,சங்கற்பம், ஆணை, கதி
கற்புமுல்லை - கணவனருளத்தலைவி விருந்தோம்புஞ் செலவத்தை வாழ்த்தும் புறத்துறை
கற்புரை - சாம பிராணி
கற்புழை - மலைக்குகை
கற்பூ - பரவமகளிர் அணியும் காதணி
கற்பூரம் - கர்ப்பூரம், பொன்னுங் காணி
கற்பூரவிளக்கு - கர்ப்பூரதீபம்
கற்பொறி - மதிற்பொறிவகை
கற்றச்சன் - கலவேலை செய்பவன்

கற்றடம் - மலை அடிவாரநாடு
கற்றலம் - கல்மேடை
கற்றவன் - அறிவாளி
கற்றளம் - கற்றிருந்தரை
கற்றளி - கற்கோயில்
கற்று - (கன்று + ஆ) கன்றுடைய பசு
கற்றுமலர - மலைப்பூடுவகை
கற்றூறு - ஒரு பூடு
கற்றுளை - காவிச்சீலை
கற்றுச்சொல்லுவோன் - புலவன் ஒருவனிடம் கற்று அவனுக்குத் துணைப்புலவனாக இருப்போன்
கற்றை - திரள், கட்டு
கனகசபை - பொன்னம்பலம்
கனகச்சுற்றம் - அரசன் பொக்கிச அதிகாரி
கனதண்டி - கனகதண்டிகை
கனகதண்டிகை - பொற்பல்லக்கு
கனகதம் - ஒட்டகம்
கனகதர் - சண்டாளர்
கனகதோராவல்லி - ஒருவகை இரத்தினம்
கனகபரீட்சை - பொன்னின் தன்மையைச் சோதித்தறிகை
கனகமாழை - பொன்கட்டி
கனகம் - பொன்
கனகன் - பொன்னிறமுள்ள இரணியன்
கனகி - ஊமத்தை
கனங்குழை - கனத்த காதணி யணிந்த பெண்
கனசாரம் - பச்சைக் கர்ப்பூரம்
கனதை - கௌரவம்
கனபாடி - வேதத்துக்குக் கனஞ் சொல்ல வல்லவன்
கனப்பு - பருமை, அழுத்தம், பாரம்
கனம் - பருமன், பெருமை, செறிவு உறுதி, மிகுதி, வேதபாடவிசேடம், வட்டம், மேகம், பொன்
கனமாப்பலகை - சங்கப் பலகை
கனராகம் - ஒருசார் இராகங்களின் தொகுதி
கனருசி - மின்னல்
கனலி - சூரியன், நெருப்பு, பாறி
கனலிநாள் - அத்தம்
கனலுதல் - எரிதல், கொதித்தல், சினத்தல், சிவத்தல்
கனலோன் - சூரியன்
கனல் - நெருப்பு
கனல்வு - கோபம்
கனவட்டம் - பாண்டியன் குதிரை, குதிரை
கனவல் - கனாக்காண்கை
கனவளவை - அகல நீளங்களுடன் ஆழம் அல்லது உயரம் அல்லது கனத்தைப் பெருக்குதலால் வரும் கணக்கு
கனவான் - பிரபு
கனவிரதம் - நீர்
கனவு - கனா, நித்திரை, மயக்கம்
கனவுதல் - கனாக்காணுதல்
கனறல் - கோபம்
கனற்கூர்மை - வளையலுப்பு
கனற்சி - உள்ளக்கொதிப்பு, வெப்பம்
கனற்சுக்கிரன் - கண்நோவகை
கனற்றுதல் - எரியச் செய்தல், சுடச் செய்தல், வெதுப்புதல், மிக்கு விளங்குதல்
கனன்மரம் - சோதிமரம்
கனா - கனவு
கனாநூல் - கனவைப்பற்றிப் பொன்னவனென்னும் புலவர்பாடிய நூல்
கனி - கனிவு, பழம், இனிமை, சாரம், பொன் முதலியனவெடுக்கும் சுரங்கம்
கனிக்காய் - பழுக்கும் நிலையிலுள்ள காய்
கனிக்காழ் - பழத்தின் விதை

**கன்னல்** - கரகம், நாழிகைவட்டில், நாழிகை, கருப்பு, கற்கண்டு, ஒருவகைக் குருவி
**கன்னற்கட்டி** - கருப்புக்கட்டி
**கன்னன்** - அங்கதேசத்தரசன்
**கன்னன்மணி** - கண்ட சருக்கரைத் தேறு
**கன்னடர்** - கருநாடர்
**கன்னுரித்தல்** - கல்லில் நாருரித்தல் (கல+நார்+) உரித்தல்
**கன்னவதஞ்சம்** - செவிமலர் என்னும் ஆபரணம்
**கன்னன்** - செம்பில் வேலை செய்பவன்
**கன்னி** - குமரி, இளமை, புதுமை, அழிவின்மை, தவப்பெண், துர்க்கை, குமரியாறு, கன்னிவிராசி, புரட்டாசி, தசநாடியுளொன்று, கற்றாழை, காக்கணம்
**கன்னிக்கால்** - கலியாண முகூர்த்தக்கால்
**கன்னிக்காவல்** - கன்னிப் பருவத்துக் காக்கும் காப்பு
**கன்னிகாரம்** - கோங்கு
**கன்னிகை** - குமரி, தாமரைக்கொட்டை, பூவின்மொட்டு
**கன்னித்தமிழ்** - அழிவில்லாததமிழ்
**கன்னிநகர்** - கன்னிமாடம்
**கன்னிநாடு** - பாண்டிநாடு
**கன்னிப்போர்** - வீரனது முதற்போர்
**கன்னிமதில்** - அழியாதகோட்டை
**கன்னிமாடம்** - இராசகன்னிகள் வசிக்கும் மாளிகை
**கன்னியர்** - மணமாகாத பெண்கள், ஏழு கன்னியர் என்னும் தேவதைகள்
**கன்னிமை** - கன்னித்தன்மை
**கன்னியாகுமரி** - ஓர் ஆறு, ஓர் முனை

**கன்னீர்ப்படுதல்** - போரிலிறந்த வீரனது நடுகல்லை நீராட்டும் புறத்துறை
**கன்னுவர்** - கன்னர்
**கன்னெஞ்சன்** - வன்மன முள்ளவன்
**கன்னை** - கட்சி

## கா

**கா** - பாதுகாப்பு, காவடித்தண்டு, 100 பலங்கொண்ட அளவு, பூ முதலியன இடும்பெட்டி, சரசுவதி
**காகக்கரிப்பன்** - கருங்கையாந்தகரை
**காகசுரம்** - ஓர் அபஸ்வரம்
**காகதாலீயம்** - காகமிருக்கப் பனம்பழம் வீழ்ந்ததுபோலத் தற்செயல் குறிக்கும் நியாயம்
**காகதுண்டம்** - அகில்
**காகநாசம்** - நரிமுருக்கு
**காகந்தி** - காவிரிப்பூம்பட்டினம்
**காகபதம்** - ஒரு கால அளவை
**காகபாதம்** - வயிரக்குற்றங்களுள் ஒன்று
**காகபிந்து** - கரும்புள்ளி
**காகபீலி** - குன்றி
**காகப்புள்** - காகம், அவிட்டம்
**காகமாசி** - மணித்தக்காளி
**காகம்** - காக்கை, அவிட்டம்
**காகவிருத்தம்** - வயிர மணிவகை
**காகளம்** - எக்காளம்
**காகக்கண் கோளநியாயம்** - காகத்தின் இருகண்களுக்கும் ஒன்றே மணியானாற் போல ஒரே சொல் அல்லது தொடர் ஈரிடத்து இயைந்து பொருள் விளங்கு நெறி
**காகிதம்** - கடுதாசி, கடிதம்

காகு - கூறப்படாத பொருளைத் தரக்கூடிய சொல்லின் ஓசை வேறுபாடு
காகுத்தன் - இராமன்
காகுளி - பேய்கத்தினாற் போலப் பாடுவது, மிடற்றெழும் மந்த இசை
காகோடியன் - சனைக்கூத்தன்
காகோதரம் - பாம்பு
காகோலம் - அண்டங்காக்கை
காகோளி - அசோகு, நேட்கொடுக்கு
காக்கட்டான் - காக்கணங் கொவ்வை, ஒரு மருந்துக்கொடி
காக்காய் - காகம்
காக்காய்ப்பொன் - பொன்போன்ற நிறத்தக்கடு
காக்கைக் குணம் - மடியின்மை, கலங்காமை, நெடுங்காண்டல், பொழுதிறவாதிடம் புகுதல், மறைந்து புணர்ச்சி முதலிய காக்கைக்குரிய ஐந்து தன்மைகள்
காக்கைக்கொடியாள் - மூதேவி
காக்கைப்பொன் - காக்காய்ப் பொன்
காக்கைபாடினியம் - காக்கை பாடினியார் இயற்றிய யாப்பிலக்கண நூல்
காக்கைபாடினியார் நச்செள்ளையார் - பதிற்றுப்பத்தின் ஆறும் பத்தினை இயற்றிய பெண்புலவர்
காக்கைவலி - வலிப்புநோய் வகை
காக்கைவேலி - வேலிப்பருத்தி
காங்கி - பேராசைக்காரன்
காங்கிசை - விருப்பம்
காங்கூலம் - அபிநயவகை
காங்கேயம் - பொன்
காங்கேயர் - கங்கை நாட்டினர், உரிச்சொல் நிகண்டு செய்த ஆசிரியர்
காங்கேயன் - முருகக்கடவுள், வீட்டுமன்
காங்கை - வெப்பம்
காசசுவாசம் - காச இழுப்பு
காசநாடி - வாயகன்ற ஒருவகைப் பாத்திரம்
காசம் - நாணல், கோழை, சளி முதலிய நோய், ஆகாயம், பளிங்கு, கண்ணோய் வகை
காசமர்த்தகம் - பெரும்புல்
காசறை - கத்தூரிமிருகம், கத்தூரி, மயிர்ச்சாந்து
காசர - காட்டா, எருமை
காசாயம் - காவித்துணி
காசி - காசிநகர், சீரகம்
காசிகாண்டம் - அதிவீரராம பாண்டியன் இயற்றிய ஒரு நூல்
காசிக்கலம்பகம் - குமரகுருபர முனிவர் காசியில் இறைவனைப் பாடிய ஒரு நூல்
காசிபன் - ஒருமுனிவர்
காசினி - பூமி
காசு - சூதாடுங்கருவி, பொன், அச்சுத்தாலி, பழைய பொன் நாணயம், சிறுசெப்புக்காசு, மணி, மேகலாபரணம், கோழை
காசுக்கட்டி - ஒருவகைக் கூட்டு மருந்துச் சரக்கு, ஒருமரம்
காசுக்கல் - நிறைகல்
காசுமீரம் - ஓர் தேசம்
காசை - காயா, நாணல், புறற்றை
காசையாடை - காவிஆடை
காஞ்சனம் - பொன், புன்கு
காஞ்சனி - மஞ்சள், பொன்மை நிறம், கோரோசனை
காஞ்சி - ஆற்றுப்பூவரசு, காஞ்சிப் பூமாலை, எதிரூன்றல், செவ்வழிப் பண்வகை, பெண்கள் இடையிலணியும் எழு கோவை மணி, மயிர்

காஞ்சித்திணை - நிலையாமையைக் கூறும் புறத்துறை
காஞ்சிப்புராணம் - சிவஞான முனிவர், கச்சியப்ப முனிவர் இருவரும் இயற்றிய காஞ்சித்தலப்புராணம்
காஞ்சிரம் - எட்டி
காஞ்சீபுரம் - ஓர் நகரம்
காஞ்சுகம் - சட்டை
காஞ்சுகன் - சட்டையிட்ட மெய்க்காப்பாளன்
காஞ்சுகி - சட்டை
காஞ்சொறி - பூண்டுவகை
காடகம் - ஆடை
காடபந்தம் - தீர்ப்பந்தி
காடமர்செல்வி - துர்க்கை
காடர் - வனவாசிகள், ஆனைமலையில் வாழும் ஒரு சாதியார்
காடவர் - பல்லவர்களின் சிறப்புப் பெயர்
காடவிளக்கு - பெருவிளக்கு
காடாற்று - இறந்தவரைச் சுட்ட எலும்பு திரட்டும் கிரியை
காடி - புளித்த கஞ்சி, புளித்த கள், கஞ்சி, ஊறுகாய், நெய், கழுத்து, பிடர் முதலியனவைத் தறந்து அமைக்கப்பட்ட மேடை, தானிய அளவை
காடிகம் - சீலை
காடு - வனம், மிகுதி, செருக்கம், செத்தை, எல்லை, சுடுகாடு, இடம், சிறியவூர்
காடுகாள் - காடுகிழாள்
காடுகிழவோன் } பாலைநிலத் தெய்வமாகிய துர்க்கை
காடுகிழாள் }
காடுகிழாக்வெயில் - பொழுது படும்போது தோன்றும் மஞ்சள் வெயில்
காடுகெடுத்தல் - காடு அழித்தல்
காடுகெழுசெல்வி - துர்க்கை
காடுகொல்லுதல் - காட்டை அழித்தல்
காடுபடுதிரவியம் - காட்டில் உண்டாகும் பொருள்
காடுபலியூட்டுதல்-காட்டில் வாழுந் தேவதைகளுக்குப் பலியூட்டுதல்
காடுவாழ்த்து-எல்லோரும் இறந்து போகவும் தான் இறவாதிருத்தலைப் பெற்ற புறங்காட்டை வாழ்த்தி உலகநிலையாமையைக் கூறும் ஒரு புறத்துறை
காடுவெட்டி - பல்லவர் பட்டப் பெயர், காடுகளை அழித்து நாடாக்கியவர்
காடைப்புடம் - காடையளவாக ஒரு குழி வெட்டி எரிக்கும் மருந்துப்புடம்
காட்சிகொடுத்தல் - தரிசனமளித்தல், காணுமாறு தோன்றுதல்
காட்சிப்பிரமாணம் - பிரத்தியட்சப் பிரமாணம், கண்ணால் நேரே பார்த்து அறிதல்
காட்சிப்பொருள் - கண்ணால் பார்க்கும் பொருள்
காட்சியவர் - அறிஞர்
காட்சியெருதுக்காசு - ஒரு பழைய வரி
காட்சியோகு - ஞானயோகம்
காட்சிவரி - தன் வருத்தங்களைப் பாடிப் பிறர் காணும்படி நடிக்கும் கூத்து
காட்டகத்தமிர்து - காட்டில் உண்டாகும் பொருள்களான அரக்கு, உலண்டு, தேன், மயிற்பீலி, நாவி என்பன
காட்டம் - விறகு, சமித்து
காட்டரண் - காடாகிய அரண்
காட்டா }
காட்டான் } காட்டுப் பசு
காட்டாளத்தி - இசையின் ஆலாபனவகை

**காட்டிமறைத்தல்** - எளிதிற்கிடைப் பதுபோல தோற்றுவித்து ஏமா றச் செய்தல்
தல், நிரூபித்தல், நினைப்பூட்டு தல், பிரதிபலிக்கச் செய்தல், ஊட்டுதல், மீட்டுத்தருதல்

**காட்டு** - காண்பிக்கை, துணைக் கருவி

**காட்டுக்கோழி** - சமபங்கோழி

**காட்டுதல்** - காண்பித்தல், அறிவித்

**காட்டேரி** - ஓர் துராத்ததேவதை

**காட்டை** - திசை, எல்லை, கால அளவை

**காட்பு** - வயிரம

**காணம்** - பொன், பொற்காசு, பொருள், கொள்ளு, செக்கு

**காணலன்** - பகைவன்

**காணலிங்கம்** - சிவகணங்களால் தாபிக்கப்பட்ட இலிங்கம்

**காணல்** - காண்கை, மனததால் குறிக்கை

**காணுக்கடி** - சிறுபாம்புக்கடி

**காணுக்காட்சி** - அற்புதக்காட்சி

**காணுர்** குருடர், பகைவர்

**காணுவுயிர்** - நுண்ணிய உடம் புள்ள உயிர்

**காணி** - $\frac{1}{80}$, 100 குழியளவுள்ள நிலம், பரம்பரையுரிமை

**காணிக்கை** - கடவுளுக்கு அல்லது பெரியோருக்கு அளிக்கும் பொருள்

**காணியாளன்** - காணியையுடைய வன், உழவின்மேல் ஊக்க முள்ளகுடி

**காணுமோர்** - காண்போர்

**காணும்** - முன்னிலைப் பன்மையில் வரும் ஓசை

**காதகம்** - கொலை

**காதகன்** - கொலையாளி, கொடிய வன்

**காதம்** - ஏழரை நாழிகைவழி (10 மைல் அளவில்,)

**காதம்பம்** - அன்னப்புள், கானக் கோழி

**காதம்பரி** - ஆதிவராக கவியால வடமொழியிலிருந்து மொழி பெயர்க்கப்பட்ட தமிழ்க் காவி யம், கள்

**காதரம்** - அச்சம், தீவினைத் தொ டர்பு

**காதலவர்** - சுற்றத்தார்

**காதலன்** - கணவன், அன்புள்ள வன்

**காதலி** - மனைவி, அன்புடையவள்

**காதலித்தல்** - அன்புமிகுதல், விரும் புதல்

**காதல்**-அன்பு, காமஇச்சை, பத்தி விருப்பு, கொலலுகை

**காதவம்** - ஆல்

**காதற்பரத்தை** - பரத்தையின் மக ளாய்த் தலைவனது காதற் குரிமை பூண்டு அவனையே சார்ந்திருப்பவள்

**காதற்பாங்கன்** - தலைவனுக்குஉற்ற நண்பன்

**காதற்பிள்ளை** - வளர்ப்புப்பிள்ளை

**காதற்றோழி** - தலைவியின் அன்புக் குரிய தோழி

**காதன்** - கொலை செய்பவன்

**காதன்மை** - அன்பு, ஆசை

**காதார** - தன் காதிற்பட, செவிப் புலன் நிறைய

**காதி** - விசுவாமித்திர முனிவரின் தந்தை

**காதிகள்** - முத்திக்குப் பாதகமா யுள்ள காமங்கள்

**காது** - செவி, ஊசி முதலியவற் றின் துளை, கவண் கல்வைக்கு மிடம், கொலை

**காதுதல்** - கொல்லுதல், வெட்டு தல்

**காதை** - சரித்திரம், கதையைக் கொண்டபகுதி
**காதோலை** - மகளிர் காதணி வகை
**காத்தண்டு** - காவடியின் தண்டு
**காத்தவராயன்**-ஒரு கிராமதேவதை
**காத்தாயி** - ஓர் கிராம தேவதை
**காத்தியாயனம்** - வடமொழி நீதி நூலுள் ஒன்று
**காத்தியாயனி** - பார்வதி, துர்க்கை
**காத்திரம்** - கிரி, கோபம், உடல், உறுப்பு, யானையின் முன்கால், கனம்
**காத்திரவேயம்** - பாம்பு
**காத்திருத்தல்** - எதிர்பார்த்திருத்தல், காவல்பூண்டிருத்தல்
**காத்தூலம்** - பண்டைக் காலத்து வழங்கிய துகில்வகை
**காத்தை** - ஓர் அசைநிலை
**காத்தோட்டி** - ஒரு செடி
**காந்தப்பர்** - கந்தருவர்
**காந்தம்** - காந்தக்கல், அழகு, மின் சாரம், புராணம்
**காந்தர்ப்பம்** - காந்தருவம்
**காந்தருவம்** - காதலர் இருவருள மனமொத்துக் கூடும் கூட்டம், இசைப்பாட்டு
**காந்தருவர்** - கந்தருவர்
**காந்தருவவேதம்** - சங்கீத சாத்திரம்
**காந்தருவி** - பாடுபவள்
**காந்தல்** - காந்துகை, கருகல், சினம்
**காந்தவர்** - காந்தருவர்
**காந்தள்** - கார்த்திகைப்பூ, காந்தள் மலரணிந்து வெறியாடுதலைக் கூறும் புறத்துறை
**காந்தன்** - கணவன், ஒரு சோழன்
**காந்தாரக்கிராமம்** - தேவலோகத்து வழங்குவதாகக்கொள்ளப்படும் இசைச்சுரவகை
**காந்தாரபஞ்சமம்**-பாலையாழ் இசை வகைகளுள் ஒன்று
**காந்தாரம்** - ஐம்பத்தாறு தேசங்களுள் ஒன்று, ஏழிசைகளுள் ஒன்று, பாலையாழ்த்திறவகை, காடு
**காந்தாரி** - துரியோதனன் தாய், சிவனார்வேம்பு, தசநாடிகளுள் ஒன்று, ஓர் இராகம், கொடியவள்
**காந்தி** - ஒளி, கிரணம், கவர்ச்சியம்
**காந்திமதி** - ஒளியுள்ளவள்
**காந்துகம்** - வெண்காந்தம்
**காந்துதல்** - எரிவெடுத்தல், வெப்பங்கொள்ளுதல், பிரகாசித்தல், கோபித்தல், பல்லிலை சுரண்டுதல்
**காந்தை** - மனைவி, பெண்
**காபட்டியம்** - கபடத்தன்மை
**காபணங்கட்டுதல்** - தெய்வத்துக்கு நேர்ந்த பணத்தை மஞ்சள் தோய்த்த துணியிற் கட்டுதல்
**காபந்து** - பாதுகாப்பு
**காபாலம்** - பிரமன் மண்டையோட்டைக் கையில் ஏந்திச் சிவன் ஆடுங்கூத்து, அகப்புறச்சமயம் ஆறுள் ஒன்று
**காபாலி** - சிவன், காபால மதத்தவன்
**காபி** - ஓர் இராகம்
**காபிலம்** - சாங்கியம், நீராடுமவகையுள் ஒன்று, கபிலப்பசுவின் நெய்
**காபோதி** - அறிவில்லாதவன்
**காப்பான்** - காவல்வீரன்
**காப்பாற்றுதல்** - ஆதரித்துப் பாதுகாத்தல்
**காப்பிடுதல்** - நெற்றியில் திருநீறு அல்லது மண்ணைக் குழைத்திட்டுக் காப்புச்செய்தல்
**காப்பியக்குடி** - பார்ப்பனரது பழைய குடிவகை, சீகாழிக்கு அயலிலுள்ள ஓர் ஊர்

**காமனூர்தி** - தென்றல்
**காமனை** - விருப்பம்
**காமன்** - மன்மதன், ஒருவகை வரிக்கூத்து, இந்திரன், வண்டு, திப்பலி
**காமன்கொடி** - மீன்
**காமன்பண்டிகை** - மன்மத தகனத் திருவிழா
**காமன்வில்** - கரும்பு
**காமாட்சி** - காஞ்சிபுரத்து அம்பிகை, உமை
**காமாட்டி** - மூடன், மண்வெட்டுவோன்
**காமாந்தகன்** - சிவன், காமத்தால் விவேகமற்றவன்
**காமாரி** - சிவன், காளி
**காமாலை** - ஒருவகை நோய்
**காமி** - காம இச்சை மிக்கவன்
**காமிகம்** - சிவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று
**காமியம்** - பயன் கருதிச் செய்யுங் கிரியை, ஆகாமியம்
**காமினி** - பெண், ஆகர்சகமனஞ் செய்தற்குரிய மந்திரம்
**காமுகன்** - காம இச்சை நிறைந்தவன்
**காமுறுதல்** - விரும்புதல், வேண்டிக் கொள்ளுதல்
**காம்பி** - நீர்மைக்கருங்கருவி
**காம்பிலி** - வடநாடுகளுள் ஒன்று
**காம்பு** - இலை பூ முதலியவற்றின் தாள், கைப்பிடி, மூங்கில், ஒருவகைப் பட்டாடை
**காம்போசம்** - ஐம்பத்தாறு தேசங்களுள் ஒன்று, பதினெண் மொழியுள் ஒன்று
**காம்போதி** - ஓர் இராகம்
**காயகற்பம்** - உடல் நீடித்திருக்க உண்ணும் மருந்து
**காயகன்** - பாடுவோன்
**காயக்கம்** - மோகமயக்கம், உறுப்பினால் செய்யும் அபிநயம்
**காயக்கிலேசம்** - உடலை வருத்தி ஒறுக்கை
**காயசித்தி** - உடலை நெடுநாளிருக்கச் செய்யும் சித்தி, பொன்னாங்காணி
**காயத்திரி** - ஒரு வேதமந்திரம், பிரமன் மனைவியாகிய காயத்திரி தேவதை
**காயநூல்** - சாமுத்திரிக சாத்திரம்
**காயமலர்** - காயாம்பூ
**காயம்** - உறைப்பு, குழம்பிலிடுங் கறித்துண்டு, கறிச்சரக்கு, பெருங்காயம், காயமருந்து, வயிரம், புண், வடு, உடல், ஆகாயம்
**காயல்** - கழி, கழிமுகம், காயற்பட்டினம்
**காயா** - கிஞ்ஞாச்செடி
**காயாம்பூவண்ணன்** - திருமால்
**காயிகம்** - உடம்பினால் செய்தது
**காய்** - பழுக்காதது, ஆடுதற்குரிய காய், வஞ்சனை
**காய்கறி** - உணவுக்குரிய மரக்கறிகள்
**காய்சினவழுதி** - கடைச்சங்கத்தின் தொடக்கத்திலிருந்த பாண்டியன்
**காய்ச்சல்** - உலர்ச்சி, சுரநோய்
**காய்ச்சுண்டை** - காசுக்கட்டி
**காய்ச்சுதல்** - காயச்செய்தல், சமைத்தல்
**காய்தல்** - காய்ச்சப்பெறுதல், சுடுதல், உலர்தல், எறிதல், அழித்தல், விலக்குதல், வெறுத்தல், கோபித்தல், வருத்துதல்
**காய்த்தல்** - மரஞ்செடி முதலியன காய்கொள்ளுதல், தழும்புண்டாதல்
**காய்த்துதல்** - எரியச் செய்தல், கோபித்தல்

**காய்ப்பு** - வெறுப்பு, மரஞ் செடி முதலியன பயன்தருகை, தழும்பு
**காய்பசி** - மிக்க பசி
**காரகம்**-வேற்றுமைபெற்றபெயர், வி - கொண்டு முடியும் நிலை, சிறைச்சாலை, மேக நோய்
**காரகஏது** - தொழில் நிகழ்ச்சிக்குக் கருவியாயுள்ள ஏது
**காரகன்**-செய்வோன், சூரியபேகாமிசம்
**காரசாரம்**-அளவோடுகூடிய காரச் சுவை
**காரடவித்தை** - சாலவித்தை
**காரடை** - ஒருவகைப் பணிகாரம்
**காரணகர்த்தா** - முதற்கடவுள்
**காரணக்குறி** - காரணப்பெயர்
**காரணசரீரம்** — சூக்கும உடல்
**காரணச்சிறப்புப்பெயர்** - காரணத்தால் ஒன்றதில் ஒன்றற்குச் சிறப்பாக வரும் பெயர்ச்சொல்
**காரணப்பெயர்**-ஒரு காரணம்பற்றி வழிவரும் பெயர்
**காரணபபொதுப்பெயர்**- பலபொருட்கும் பொதுவாக வரும் காரணப் பெயர்ச்சொல்
**காரணம்** - மூலம், ஏது, நோக்கம், சிவாகமத்தொன்று
**காரணவாதபெயர்** - திருவாசகம் என்றதுபோலக் காரணம் காரியத்திற்கு ஆகிவரும் பெயர்ச்சொல்
**காரணவிடுகுறி**-முக்கண்ணன் என்றதுபோல் சொல்லின் காரணங்கருதிய வழிப் பலர்க்குஞ் செல்லினும் இடுகுறிபோல ஒரு பொருட்கே செல்லும் பெயர்ச்சொல்
**காரணிகன்** - நியாயநடுவன்
**காரண்டம்** - நீர்க்காக்கை
**காரம்** - உறைப்பு, அழிவு, சாம்பலுப்பு
**காரவல்லி** - பாகல்
**காரறிவு** - மயக்கந்தரும் அறிவு
**காரன்** - வினைமுதல் உடைமை முதலிய பொருளில் வரும் ஆண்பாற் பெயர் விகுதி
**காரா** - எருமை
**காராகிருகம்**
**காராகிரகம்** } சிறைச்சாலை
**காராடு** - வெள்ளாடு
**காராண்மை** - நிலத்தைப் பயிரிடுங் குடியுரிமை
**காராபூந்தி** - ஒரு பணிகாரம்
**காராமணி** - ஒருவகைப் பயறு
**காராம்பசு** - நாக்கும் முலைக காம்பும் கருநிறமாகவுள்ள பசுச் சாதி
**காராம்பி** - எருது பூட்டி நீரிறைக்கும் கருவி வகை
**காராளர்**-வேளாளர், பயிரிடுவோர்
**காராவி** - கடலின்மீது குவிந்து கீழிறங்கி நீரை முகந்து பெருக்குத்தூண்போல் நிற்கும் மேகம்
**காரான்** - எருமை
**காரி**-கருமை, கரிக்குருவி, காக்கை, நஞ்சு, கரிய எருது, இந்திரன், ஐயனார், வயிரவன், கடைவள்ளல்களுள் ஒருவன், காரிநாயனார், காரிவள்ளலின் குதிரை, ஒரு ஆறு, செய்பவன், வினைமுதல் உடைமை முதலிய பொருளில் வரும் ஒரு பெண்பாற் பெயர் விகுதி, பதினாறு படி அளவு
**காரிகம்** - காவிக்கல்
**காரிகை** - பெண், அழகு, அலங்காரம், கட்டளைக் கலித்துறை, அமிதசாகரர் இயற்றிய யாப்பிலக்கணம் (11-ஆம் நூற்றாண்டு)
**காரிக்கன்** - சலவை செய்யாத வெள்ளைத் துணி

காரிக்குதிரை - ஐயனாரது குதிரை
காரிதாய் - காடுகிழாள்
காரிநாயனார் - அறுபத்துமூன்று நாயன்மாருள் ஒருவர்
காரிமாறன் - காரியின் புதல்வனை நமமாழ்வார்
காரியகர்த்தன் - தொழில் நடத்துவோன், மேலதிகாரி
காரியசாதனம் - துணைக்கருவி
காரியசித்தி - காரியம் கைகூடுகை
காரியதரிசி - ஒரு சபையின் காரியங்களை நாவகிப்பவன்
காரியதுரந்தரன்-காரியப் பொறுப்பு வகித்தலில் வல்லவன்
காரியப்படுத்தல் - தொழிற்படுத்துதல், கைகூடுதல்
காரியப்பாடு - பயன்
காரியம் - காரணத்தாலாவது, செய்கை, நோக்கம்
காரியார் - கணக்கதிகாரம் என்னும் நூலின் ஆசிரியர்
காரிருள் - மிக்க இருள்
காரீயம் - ஈயவகை
காரு - வண்ணான்
காருகத்தம் } இல்லற நிலை
காருகத்தியம் }
காருகத்தொழில் - நெய்தற்றொழில்
காருகபத்தியம் - முத்தீயுள் ஒன்று
காருகம் - நெய்யுந் தொழில், இல்லறம்
காருகவடி - கிரகநிலை
காருகன்-நெய்வோன், வண்ணான், ஓவியன், கொல்லன்
காருடம் - பருந்து, விடம் நீக்கும் வித்தை, பச்சைக்கல், புல்
காருணி - வானம்பாடி
காருணியம் - கருணை
காருவாகன் - வண்ணான்
காரூகம் - கருங்குரங்கு
காரெட்டு-நக்கீரதேவரியற்றிய ஓர் நூல்
காரேலி - கறுப்பெலி
காரேனல் - கறுப்புநிறமான வெளிமறுநிலம்
காரேறு - எருமைக்கடா, இடி
காரை - காட்டுச் செடி வகை, ஆடை சுண்ணச்சாந்து, ஈகல
காரைக்காலம்மையார் - அறுபத்துமூவர் நாயன்மாருள் ஒருவர்
காரோடன் - ஆயுத உறை செய்வோன், சாணைக்கல் செய்வோன்
காரோணம் - மகாசங்கார காலத்துச் சிவபெருமான் உயிர்களைத் தன்னில் ஐக்கியமாகக்கொண்ட தலம்
கார் - எருமை, மேகம், நீர், கார்காலம், கருங்குரங்கு, இருள், கருங்குட்டம், அறிவுமயக்கம், பசுமை, செவ்வி
கார்காத்தவேளாளர் - வேளாளரில் ஒரு பிரிவினர்
கார்காலம் - ஆவணி புரட்டாசி மாதங்கள்
கார்கோள் - கடல், ஓமைமரம்
கார்க்கோடகன்-எட்டு நாகங்களுள் ஒன்று
கார்த்தல் - உறைத்தல், உப்புக்கரித்தல், கறுப்பாதல், அரும்புதல்
கார்த்த வீரியார்ச்சுனன் - பரசுராமனால் கொல்லப்பட்ட மகிஷ்மதி அரசன்
கார்த்திகேயன் - முருகக் கடவுள்
கார்த்திகை - ஒரு நட்சத்திரம், ஒரு மாதம், கார்த்திகைப் பூ, துர்க்கை
கார்த்திகைச்சம்பா - சம்பாவகை
கார்த்திகைப்பச்சை - பழைய வரி வகை
கார்த்திகைப்பூ - காந்தட்பூ

**காலமயக்கம்** - காலவழுவமைதி
**காலமயக்கு** - பிறந்த நிலைவன வரு தற்குரிய கார்காலம் இதென்றெண்ணி நிலைவிக்குந் தோழி காலத்தை மயக்கிக் கூறும் அந்தத்துறை
**காலமலைவு** - ஒரு காலத்துக் குறியதை மற்றொரு காலத்துக் குறியதாகக் கூறும் வழு
**காலமழை** - பருவமழை
**காலமறிதல்** - வினைசெய்தற்கேற்ற காலமறிதல்
**காலமிருத்து** - விதித்த காலத்தில் அடையும் மரணம்
**காலமேகம்** - ஊழிக் காலத்தில் தோன்றும் மேகம்
**காலம்** - பொழுது, தக்கசமயம்
**காலம்பெற** - தக்க காலத்தில், விடியற்காலையில்
**காலயுக்தி** - அறுபதுஆண் டுகளுள் ஒன்று
**காலருத்திரன்** - ஊழிகாலத்துச் சங்கார மூர்த்தியான மகாருத்திரன்
**காலவகை** - காலவேறுபாடு
**காலவம்** - செருப்பு
**காலவர்த்தமானம்** - நடப்புச்செய்தி
**காலவரை**
**காலவரையறை** } காலநியமிப்பு
**காலவழு** - ஒருகாலச் சொல் தன்னோடு இயையாக் காலத்தோடு புணரும் குற்றம்
**காலவழுவமைதி** - காலவழுவை இலக்கணமுடையதாக அமைப்பது
**காலவாகுபெயர்** - ஒரு காலத்தின் பெயர் அக்காலத்தோடு இயைபுடைய பொருளுக்கு ஆகிவருவது
**காலவிடைநிலை** - காலத்தைக் காட்டும் இடைநிலை
**காலளப்பான்** - தானியமளப்பவன்
**காலன்** - இடமகிங்கரன், இயமன், சனி
**காலாகாலம்** - உரிய சமயம்
**காலாகோலம்** - அலங்கோலம், உலோசல்
**காலாங்கி** - ஒரு மந்திரம்
**காலாசு** - காற்கவசம்
**காலாடுதல்** - முயற்சியால் செல்வம் செழித்தல்
**காலாட்டம்** - முயற்சி
**காலாந்தகன்** - சிவன்
**காலாந்தரம்** - வேறுபட்ட காலம், இடைப்பட்ட காலம்
**காலாயுதம்** - கோழி
**காலாரி** - இயமனைச் சங்கரித்தற்காக எடுத்த சிவமூர்த்தம்
**காலாவதி** - கால எல்லை
**காலாழி** - காலமோதிரம்
**காலாழ்** - சேறு
**காலாள்** - பாதசாரியாகிய போர் வீரன்
**காலாறு** - வண்டு, சிற்றாறு
**காலி** - பசுக்கூட்டம், பசு, துன்மார்க்கம்
**காலித்தல்** - கிரகங்கள் உதயமாதல்
**காலிலி** - முடவன், அருணன், பாம்பு, காற்று
**காலுதல்** - தோற்றுவித்தல், விளங்குதல், குதித்தல், கக்குதல்
**காலூரம்** - தவளை
**காலூன்றுதல்** - நிலைபெறுதல்
**காலேகம்** - முத்து
**காலேகவண்ணம்** - கலவைச் சாந்து
**காலேந்திரம்** - காலத்தைப் புலப்படுத்தும் இயந்திரம்
**காலேயம்**
**காலேசம்** } புல்லுண்ணும் நாற்கால உயிர்கள், மோர், கள், அகில்

**காலை** - வாழ்நாள், முறை, தருணம், விடியற்காலம், சூரியன், பள்ளியெழுச்சி முரசம்
**காலைக்கடன்** - காலையில செய்ய வேண்டிய கடமைகள்
**காலைமுரசம்** - பள்ளியெழுச்சி முரசு
**காலெற்றுதல்** - காற்று வீசுதல்
**காலோடுதல்** - வழுக்குதல்
**காலோலம்** - அண்டங்காக்கை
**கால்** - நாலிலொன்று, பாதம், பூவின்தாள், தேருருளை, வண்டி, கோல், குறுந்தறி, தூண், மூலை, வமிசம், பிறப்பிடம், வாய்க்கால், பிரிவு, வழி, நடை, இடம், வளம், மூலம், பருவகாலம், கிரணம், மழைக்கால், காற்று, வாதநோய், பஞ்சபூதம், பொழுது, செவி, தடவை, காலன், ஒருநிறம், ஒரு வினையெச்ச விகுதி
**கால்கடியன்** - வல்லவன்
**கால்கழி**-மலங்கழுவி என்பதைக் குறிப்பிடும் இடக்கரடக்கு
**கால்கிளர்தல்**-ஓடுதல், படையெடுத்துச் செல்லுதல்
**கால்கொள்ளுதல்** - தொடங்குதல், இடங்கொள்ளுதல், ஏறியிருத்தல்
**கால்கோள்** - தொடக்கம், இறந்த வீரனுக்குக் கல்லில் அவன் உருவு வெட்டத் தொடங்குதலைக் கூறும் புறத்துறை
**கால்சாய்தல்** - அடியோடழிதல்
**கால்சிதைத்தல்** - காலால் புறண்டுதல்
**கால்சீத்தல்** - காலினால் கீறுதல்
**கால்செய்வட்டம்** - பேராலவட்டம்
**கால்தாழ்தல்** - தாமதித்தல், ஈடுபடுதல், மூழ்கிவிடுதல்
**கால்நடை** - ஆடுமாடு
**கால்நோக்கு** - கிரகங்களின் காற்பார்வை
**கால்பரிதல்** - அறுபடுதல்
**கால்பாவுதல்** - காலூன்றுதல்
**கால்மிதி** - அடிச்சுவடு, அடிவைக்குந்தவளை, அடிவைப்பு
**கால்யாத்தல்** - நெருங்குதல், தேக்குதல், பரத்தல்
**கால்வடம்** - காலணிவகை
**கால்வழி** - வமிசம்
**கால்வாங்குதல்** - பின்வாங்குதல்
**கால்வாசி** - நாலிலொருபங்கு
**கால்வாய்** - வாய்க்கால்
**கால்வீழ்தல்** - இறங்குதல், ஒளிவீசுதல்
**காவடி** - காததண்டு, பிரார்த்தனைக்கு எடுக்கும் காவடி
**காவணப்பந்தி**-மண்டபத்தின் அலங்காரமான மேல்தளம்
**காவணம்** - பந்தல், சோலை
**காவதம்** - காதம், முன் பின் பத்து மைல் கொண்ட தூரம்
**காவதன்** - வரிக்கூத்துவகை
**காவலன்** - அரசன், பாதுகாப்போன், கணவன்
**காவல்** - பாதுகாப்பு, வேலி, மதில் அரண், கவசம்
**காவற்கடவுள்** - திருமால்
**காவற்கணிகை** - களத்தாடும்கூத்தி
**காவற்காடு** - கோட்டையைச்சூழக் காவலாக வளர்க்கப்படும் காடு
**காவற்கூடம்** - சிறைச்சாலை
**காவறபெண்டு** - செவிலி, பெண்பாற் புலவருள் ஒருவர்
**காவற்றெய்வம்** - காக்கும் தெய்வம்
**காவனிகுதி** - காவற்காரர் கொடுக்கும் கடமை
**காவன்** - சிலந்திப் பூச்சி
**காவன்மகளிர்** - சிறைபிடிக்கப்பட்ட பகைவர் மனைவியர்

**காவன்மரம்** - பகைவர் அணுகாமல் பாதுகாக்கப்படும் மரம்
**காவன்முரசம்** - காத்தற்றொழிலுக்கு அறிகுறியான அரசாங்க முரசு
**காவன்முல்லை** - அரச னாட்சியைச் சிறப்பிக்கும் புறத்துறை
**கவாலி** - சிவன்
**காவி** - பழுப்புநிறம், கருக்குவளை காவிக்கல், கள், கப்பலின் தலைப்பாய்
**காவிதி** - வேளாளர்க்கு அரசர் கொடுக்கும் பட்டம், மந்திரி, கணக்கர் சாதி
**காவிதிப்புரவு** - அரசரால் காவிதி யார்க்குக் கொடுக்கப்பட்ட ஊர்
**காவிதிப்பூ** - காவிதிப்பட்டத்துடன் அளிக்கப்படும் பொற்பூ
**காவிதிமை** - கணக்குவேலை
**காவிப்படுவான்** - கப்பலின் தலைப் பாய் மரம்
**காவியம்** - பழைய கதைபற்றிய தொடர் நிலைச் செய்யுள்
**காவியன்** - சுக்கிரன்
**காவியாக்கட்டை** - நக்கூரக்கட்டை
**காவிரி** - காவேரி
**காவிரிபுதல்வர்** - வேளாளர்
**காவிரிப்பட்டினம்** - காவிரிப் பூம்பட் டினம்
**காவு**-சிறு தெய்வங்களுக்கிடும் பலி
**காவுதடி** - காவடித் தண்டு
**காவுதல்** - சுமத்தல்
**காவேரி** - காவிரி ஆறு,
**காவோலை** - முற்றின ஓலை
**காழகம்** - கடாரம் (பர்மா), ஆடை, கைக்கவசம், கருமை
**காழம்** - ஒருவகை உடை, மன வுறுதி, தூண், மரவைரம்
**காழி** - உறுதி, சீகாழி
**காழியர்கோன்**-திருஞானசம்பந்தர்
**காழியன்** - வண்ணான், பிட்டுவாணி கன், உப்புவாணிகன்
**காழூன்றுகடிகை** - குத்துக்கோல், கூடாரம்
**காழோர்** - யானைப்பாகர்
**காழ்** - ஓடஞ் செலுத்தும் தண்டு, இருப்புக்கம்பி, யானையைச் செலுத்தும் பரிக்கோல், காம்பு, கழி, ஒளி, இரத்தினம் முத்து, பளிங்கு, பூமாலை, நூற சரடு, விதை, கனித்தோல், பருக் கைக்கல், கருமை, குற்றம்
**காழ்கொள்ளுதல்** - முதிர்தல்
**காழ்த்தல்** - முற்றுதல், மனவைரக் கொள்ளுதல், அளவுகடக்கது மிகுதல், உறைத்தல்
**காழ்ப்பு** - உறைப்பு, வைரம்
**காழ்வை** - அகில்
**காளகண்டம்** - குயில்
**காளகண்டன்** - சிவன்
**காளகண்டி** - துர்க்கை, ஓர் அமங் கல நாள்
**காளகம்** - எக்காளம்
**காளகூடம்** - ஓர்நரகம்
**காளத்தி** - சீகாளத்தி
**காளபதம்** - மாடப்புறா
**காளபம்** - போர்
**காளம்** - நஞ்சு, எட்டி, கருமை, மேகம், சூலம், கழு
**காளமுகி** - கலமழை பெய்யும் மேகம்
**காளமேகப்புலவர்** - 15-ஆம் நூற் றுண்டில் விளங்கிய பெரும்புல வர்
**காளமேகம்** - கார்மேகம்
**காளம்பிடித்தல்** - எக்காள மூதுதல்
**காளயுக்தி** } அறுபதுஆண்டுகளில்
**காயுத்தி** } 52-ஆவது
**காளவனம்** - சுடுகாடு
**காளவாய்** - கழுதை, சுண்ணாம்பு செங்கல் சுடும் சூளை

**காளவிளக்கு** - விழாக்களில் பயன்படுத்தும் பெரிய விளக்கு
**காளாஞ்சி** - தாம்பூலம் துப்புங்கலம், தாம்பூலம் கொடுக்கும் கலம்
**காளாத்திரி** - பாம்பின் நச்சுப் பற்களுள் ஒன்று
**காளாமுகம்** - சைவசமயத்தின் உட்பகுதி ஒன்று
**காளாம்பி** - காளான்
**காளாய்** - நாய்க்குடை
**காளி** - துர்க்கை, பார்வதி, பரிமள கந்தி, பாம்பின் நச்சுப் பற்களுள் ஒன்று, மணித்தக்காளி
**காளிகம்** - உப புராணங்களுள் ஒன்று
**காளிங்கராயன்** - பாண்டியர் காலத்து அரசாங்கத் தலைவருக்கு வழங்கிய பட்டப் பெயர்
**காளிங்கன்** - கலிங்கதேசத்தான், கண்ணனால் அடக்கப்பட்ட ஒரு பாம்பு
**காளிதம்** - களிம்பு
**காளிதாசன்** - வடமொழிப் புலவருள் ஒருவர்
**காளிந்தி** - யமுனை
**காளிப்பணம்**-மூன்று அணா நான்கு பை மதிப்புள்ள பழைய நாணயம்
**காளிமம்**, **காளிமை** } கருப்பு
**காளியன்** - கண்ணன் மிதித்தாடிய பாம்பு
**காளை** - இளவெருது, கட்டிளமைப் பருவத்தினன், ஆண்மகன், பாலைநிலத்தலைவன், வீரன்
**காளைக்கன்று** - பசுவின் ஆண் கன்று
**காளையம்** - பேராரவாரம்
**காறல்** - தொண்டையில் உண்டாகும் கறகறப்பு, காறும் பொருள்

**காறுக்கருணை** - சேனைச் செடி வகை
**காறு** - கால அளவு, கொழு
**காறுகருணை** - கருணைக்கிழங்கு
**காறுதல்** - காறற் சுவையாதல், கோழையைத் தொண்டையிலிருந்து கொணர வாய் முயலுதல், கருகுதல், வைரங் கொள்ளுதல்
**காறுபாறு** - கவனிப்பு
**காறை** - சிறுவர் கழுத்தணிவகை
**காறையெலும்பு** - கழுத்தெலும்பு
**காற்கடைகொள்ளுதல்** - அலட்சியம் செய்தல்
**காற்காறை** - காலாபரணம்
**காற்தளம்** - பூராடநட்சத்திரம்
**காற்சரி** - பாதசரம்
**காற்சவடி** - காற்காப்பு
**காற்சிலம்பு** - காலணிவகை
**காற்படுதல்** - அழிதல்
**காற்படை** - கோழி, காலாட்படை
**காற்பரடு** - புறவடி
**காற்பனிகம்** - கற்பிக்கப்பட்டது
**காற்பாசம்** - பருத்தி
**காற்பெய்தல்** - ஓடுதல்
**காற்றாடி** - சுழல்கறங்கு, காற்றாடிப் பட்டம்
**காற்றின் சகாயன்** - தீ
**காற்றினாள்** - சுவாதிநாள்
**காற்று** - வாயு, உயிர்ப்பு
**காற்றுதல்** - வெளிப்படுத்துதல், அழித்தல்
**காற்றேறு** - காற்றினால் உண்டாகும் ஒருவகை முத்துக்குற்றம்
**காற்றொழில்** - அற்பவேலை
**காற்றேட்டி** - ஒருவகைக் கொடி
**கானகம்** - காடு
**கானக்குறத்தி முலைப்பால்** - தேன்
**கானக்கோழி**, **கானங்கோழி** } காட்டுக்கோழி
**கானசரம்** - கானல்

கானடா - ஓர் இராகம்
கானநாடன் - முல்லைநிலத் தலைவன்
கானப்படம் - காடெழுதின கேடயம், வலை
கானப்பேர் - காளையார் கோயில்
கானம் - காடு, சந்தனம், வாசனை, [illegible]ருதி, பெருந்தை, தேர், இசைப்பாட்டு, வாயடிபாடி
கானல் - வாசனை, கடற்கரை, கடற்கரைச் சோலை, கழி, உப்பளம், உவர்நிலம், மலைசார்ந்த சோலை, வெப்பம், சூரிய கிரணம், ஒளி, பேய்த்தேர்
கானல்வரி - கழிக்கரைப்பாடல்
கானவன் - குறிஞ்சி முல்லை அல்லது பாலைநிலத்து மகன், குறவன்
கானனம் - காடு
கானனீர் - கானலில் தோன்றும் நீர்த்தோற்றம்
கானு - சுக்கான் கைப்பிடி
கானுங்கள்ளி - இலைக்கள்ளி
கானுங்கோழி - காட்டுக்கோழி
கானுள் - ஒருவகைக்கொடி
கானீனன் - கன்னிபெற்ற மகன், கன்னன்
கானெறி - சன்னல்
கானை - காளையார்கோயில்
கான் - எழுத்துச்சாரியைகளுள் ஒன்று, வாய்க்கால், காடு, வாசனை, பூ
கான்புலி - காட்டுப்பூனை
கான்மரம் - ஆல்
கான்மியம் - மும்மலத்துளொன்றாய் அநாதியாயுள்ள கன்மமலம்
கான்மீரம் - காசுமீரம்
கான்முளை - குழந்தை
கான்யாறு - முல்லை நிலத்துள்ள ஆறு
கான்றல் - இருமிக்கோழை துப்புகை
கான்றை - மரவகை

# கி

கிகிணி - பக்கணம், கிம்புருடன்
கிக்கிரி - மீன்கொத்திப்புள்
கிங்கரன் - ஏவலாள்
கிங்கிணி - பாதசதங்கை, அரைச்சதங்கை
கிங்கிலியன் - ஏவலாளன்
கிசலயம் - தளிர்
கிசனி - பாவையின் செவ்வு
கிச்சடி - சோற்றுவகை, கறிவகை
கிச்சிலி - கொழிஞ்சி, நாரத்தை, பூலாங்கிழங்கு
கிச்சு - நெருப்பு
கிஞ்சம் - சிறிது, புளி
கிஞ்சல் - சுருக்கம்
கிஞ்சனன் - ஏழை
கிஞ்சிஞ்ஞத்துவம் - சிற்றறிவுடைமை
கிஞ்சித்து - கொஞ்சமாக
கிஞ்சில, கிஞ்சு - சிறிதான
கிஞ்சுகம் - முள்முருக்கு, பலாசு, சிவப்பு
கிஞ்சுகி - பலாசு
கிஞ்ஞா - காயா
கிட - ஒரு நிகழ்கால இடைநிலை
கிடகு - இருபத்துநான்கு விரல் கொண்ட முழம்
கிடக்கை - படுக்கை, படுத்திருக்கும் நிலை, பூமி, இடம், பரப்பு, உள்ளுறுபொருள்
கிடங்கர் - கடல்
கிடங்கு - அகழ், குளம், குழி, பண்டசாலை
கிடத்தல் - படுத்தல், உறங்குதல், தங்குதல், கூடியதாதல்,
கிடப்பு - நிலை, கிடந்து துயில்கை
கிடா - கடா
கிடாய் - ஆட்டின் ஆண்
கிடாரம் - பெரிய கிடா
கிடாரவன் - அகில்

**கிடிகி** - சன்னல்
**கிடுகிடு** - ஒரு பறை, நடுக்கம்
**கிடுகிடுத்தல்** - நடுங்குதல், ஒலித்தல்
**கிடுகின்படம்** - தோற்கேடகம்
**கிடுகு** - கேடகம், சட்டப்பலகை, தேர் மரச்சுற்று, முடைந்த ஓலைக்கீற்று, வட்டவடிவமான பறை
**கிடுமுடி** - ஒருவகைச் சிறு பறை
**கிடேச்சு** - ஒருவகைச் செடி, (கிடைச்சி)
**கிடை** - கிடக்கை, இருப்பிடம், வேதமோதும் பாடசாலை, ஆயுதம் பயிலிடம், உட்கருத்து, சந்தேகம், உவமை, கிடேச்சு
**கிடைப்படுதல்** - கட்டுப்படுதல்
**கிட்கிந்தை** - வாலி சுக்கிரீவர்களின் இராசதானி—மைசூருக்கு வடபாலுள்ள மலை
**கிட்ட** - அருகே
**கிட்டத்தட்ட** - ஏறக்குறைய
**கிட்டம்** - இரும்பு முதலியவற்றின் கசடு, இறுக்கம்
**கிட்டமுட்ட** - ஏறக்குறைய
**கிட்டலர்** - பகைவர்
**கிட்டாக்களிக்கொட்டை** - சேராங் கொட்டை
**கிட்டார்** - பகைவர்
**கிட்டி** - நுகமூளை, சிறுவர் விளையாட்டுக் கருவிகளுள் ஒன்று, கைத்தாளம், சின்னிச்செடி, பன்றி, தலையீற்றுப் பசு
**கிட்டிகட்டுதல்** - நெருக்கி வருத்துதல்
**கிட்டிணம்** - கறுப்பு
**கிட்டுதல்** - சமீபித்தல், கிடைத்தல், நெருங்குதல், கட்டுதல்
**கிணகம்** - அடிமை
**கிணற்றுத்தானம்** - பிறந்த இலக்கினத்திலிருந்து நாலாமிடம்
**கிணறு** - கேணிவகை
**கிணுட்டு** - ஓலை நறுக்கு, மீன் செலுப்பு முதலியன
**கிணிரெனல்** - ஓர் ஒலிக்குறிப்பு
**கிணை** - ஒருவகை மருதப்பறை, உடுக்கை
**கிணைநிலை** - கிணையன், வேளாளனைக் கிணைகொட்டிப் புகழும் புறத்துறை
**கிணைமகள்** - விறலி
**கிணைமகன்**
**கிணையன்**
**கிணைவன்** } கிணைப்பறை கொட்டுபவன்
**கிண்கிணி** - கிங்கிணி, காற்சதங்கை
**கிண்டி** - மூக்குத்துளையால் நீர் விழும் சிறு கலம்
**கிண்டுதல்** - கிளறுதல், தோண்டுதல், ஆராய்தல்
**கிண்ணகம்** - நீர்ப்பெருக்கு
**கிண்ணம்** - சிறு வட்டில்
**கிண்ணரம்** - ஒரு நரம்பிசைக் கருவி
**கிண்ணி** - கிண்ணம், பசு முதலிய விலங்குகளின் குளம்பின் மேலுள்ள திரட்சி
**கிண்ணெனல்** - ஓர் ஒலிக்குறிப்பு
**கித்த** - விரைவாக
**கித்தம்** - செய்யப்பட்டது
**கித்தான்** - சணற்கயிறு, ஒருவகை உரப்புத் துணி
**கித்திலம்** - கூந்தற் கமுகு
**கித்துதல்** - ஒற்றைக்காலால் தத்தி நடத்தல்
**கிந்துதல்** - நொண்டி நடத்தல்
**கிம்புரி** - யானைத் தந்தத்திலிடும் பூண், முடியுறுப்புள் ஒன்று, நீர் விழுதற்கு மகரவாய் வடிவில் அமைக்கப்பட்ட தூம்பு, மகரவாயென்னும் ஆபரணம்
**கிம்புருடர்** - மனிதமுகமும் குதிரையுடலும் படைத்த தேவசாதியார்

**கிம்புருடவருடம்** - ஒன்பது நிலங்களுள் ஒன்று
**கியாதி** - புகழ், பிருகுவின் மனைவி
**கியாழம்** - குடிநீர், கசாயம்
**கிரகச்சித்திரம்** - குடும்பச் சச்சரவு
**கிரகணம்** - பற்றுகை, மனதிற கிரகிக்கை, சந்திர சூரியர்களின் கிரகணம்
**கிரகபதி** - சூரியன்
**கிரகபரிவிருத்தி** - கிரகத்தின் சுற்று
**கிரகம்** - கோள்கள், தாளப்பிரமாணத்தொன்று
**கிரகவக்கிரம்** - கிரகம் பின்னோக்கிச் செல்லும் கதி
**கிரகித்தல்** - பற்றுதல், உணர்தல், குறிப்பாலறிதல்
**கிரணமாலி** - சூரியன்
**கிரணம்** - கதிர், ஒளி, சிவாகமங்களில் ஒன்று
**கிரணன்** - சூரியன்
**கிரது** - ஒரு நரகம், ஒரு முனிவர்
**கிரந்தம்** - நூல, வடமொழியை எழுதற்குத் தமிழ மக்கள் வழங்கிய எழுத்து, வடமொழி
**கிரந்தி** - முடிச்சு, கிரந்தி நோய்
**கிரந்திதகரம்** - நந்தியாவர்த்தம்
**கிரந்திநாயகம்** - ஒருவகைப் பூடு
**கிரந்து** - தீர்த்தங்கரருள ஒருவர்
**கிரமச்சா** - கிரக கணிதததின் உறுப்பு
**கிரமதாடி** - வேதத்தின் கிரமபாடமோதுவதில் வல்லவன்
**கிரமம்** - ஒழுங்கு, நீதிமுறை, வேதமோது முறை
**கிரயம்** - விற்பனை, விலைத்தொகை
**கிரவுஞ்சகிரி**-இமயமலைத தொடரின் கீழ்ப்பாகத்துள்ள ஒரு மலை
**கிரவுஞ்சத்தீவு** - ஏழு தீவுகளுள ஒன்று
**கிரவுஞ்சம்** - அன்றில், கோழி பறக்கும அளவுள்ள தூரம், ஒரு மலை

**கிராக்கி** - அருவிலை
**கிராணம்** - மூக்கு, கிரகணம், சிறுவட்டில்
**கிராதம்**-ஐம்பத்தாறு தேசங்களுள ஒன்று
**கிராதன்** - மலைக்குறவன், கொடியவன்
**கிராந்தி** - கிரகச்சாய்வு
**கிராந்திவீதி** - சூரிய வீதி
**கிராந்துதல்** - மறைந்துகொள்ளுதல்
**கிராமசிம்மம்** - நாய்
**கிராமணி**-கிராமத் தலைவன், சான்றோர், கைக்கோளர்பட்டப்பெயர்
**கிராமம்** - மருதநிலத்தூர், ஊர், நீர்ப்பறவை
**கிராமாந்தரம்** - நாட்டுப்புறம்
**கிராமியம்** - இழிசினரது கொச்சைப் பேச்சு, இழிவானது
**கிராம்** - கடிவாளம்
**கிராம்பு** - இலவங்கம்
**கிராம்புப்பூடி** - கிராம்புவடிவான ஒரு காதணி
**கிராய்** - புறகாடு
**கிரி** - பன்றி, மலை
**கிரிகன்னி** - தூக்கை
**கிரிகிரி** - காட்டுப் பன்றி
**கிரிசரம்** - யானை
**கிரிசன்** - சிவன்
**கிரிசு** - ஒருவகைக் குற்றுவாள்
**கிரிசை** - பார்வதி, கிரியை
**கிரிச்சம்** - வருத்தம்
**கிரிச்சரரோகம்** - மூத்திரரோகம்
**கிரிதுர்க்கம்** - மலையரண்
**கிரிமிஞ்சி** - ஒருவகைச் சிவப்புச் சாயம்
**கிரியாசத்தி** - உலகப் படைப்பைச் செய்து கன்மங்களுக்கு ஈடாக தனு கரணங்களை உயிர்களுக்குக் கொடுக்கும் சிவசத்தி
**கிரியாவதி** - தீக்கைவகை

**கிரியாவான்** - அனுட்டானமுள்ளவன்
**கிரியை** - செய்கை, பூசை, தாளப்பிரமாணத்தொன்று, வினை
**கிரிராசன்** - இமயமலை
**கிரீசன்** - சிவன்
**கிரீடதாரணம்** - முடிதரிக்கை
**கிரீடம்** - மணிமுடி
**கிரீடி** - அருச்சுனன், அரசன், விளையாடுதல, புணர்தல
**கிரீடை** - விளையாட்டு, புணர்ச்சி
**கிரீட்டுமம்** - முதுவேனிற்காலம்
**கிரீட்டுமசுந்தரி** - செருப்படிப் பூண்டு
**கிரீதன்** - பெற்றோரிடமிருந்து விலைக்கு வாங்கப்பட்ட சுவீகார புத்திரன்
**கிரீவம்** - கழுத்து
**கிருகசாரி** - இல்லற நிலையிலுள்ளவன்
**கிருகச்சித்திரம்** - குடும்பச் சச்சரவு
**கிருகத்தன்** - இல்லறத்தான்
**கிருகப்பிரவேசம்**-புதுவீட்டிற் புகும் போது செய்யும் சடங்கு
**கிருகம்** - வீடு
**கிருகரன்** - தசவாயுக்களில் ஒன்று
**கிருகி** - இல்லறத்தான்
**கிருகிணி** - மனைவி
**கிருசம்** - இளைப்பு
**கிருசரான்னம்**-அன்னத்துடன் எள்ளுப்பொடி கலந்த உணவு
**கிருசரோகம்** - தேகத்தை வற்றி ஒடுக்கும் நோய்
**கிருட்டி** - தலைஈற்றுப் பசு, பன்றி, ஒருவகைப் பறவை
**கிருட்டிணசகாயன்** - அருச்சுனன்
**கிருட்டிணபக்கம்** - தேய்பிறைப் பக்கம்
**கிருட்டிணம்** - கறுப்பு, மிளகு
**கிருட்டிணமிருகம்** - கருநிறமுள்ள மான்வகை
**கிருட்டிணராயன்**-16-ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் விசயநகரத்தை ஆண்ட அரசருள் ஒருவன்
**கிருட்டிணன்** - கண்ணன், அருச்சுனன்
**கிருட்டிணை** - திரௌபதி, ஓர் ஆறு, கடுகு, வால்மிளகு
**கிருதகிருத்தியன்** - செய்தற்குரிய கடமையைச் செய்துமுடித்தவன்
**கிருதஞ்ஞன்** - செய்நன்றியறிபவன்
**கிருதம்** - செய்யப்பட்டது, கிருதயுகம், நெய்
**கிருதயுகம்**-முதல் யுகம், 17,28,000 கொண்ட ஆண்டு
**கிருதா** - கன்னமீசை
**கிருதி** - கீர்த்தனம்
**கிருது** - செருக்கு, ஒய்யாரம்
**கிருத்தம்** - செய்யப்பட்டது
**கிருத்தி** - தோல்
**கிருத்திகை** - கார்த்திகை
**கிருத்திமம்** - கிருத்தி, செயற்கையானது, பொய், பூதம்
**கிருத்தியம்**-தொழில், கிரியைவகை
**கிருத்திரம்** - கழுகு
**கிருத்திரிமம்** - போலியானது, வஞ்சனை
**கிருத்திரிமன்** - பெற்றோர் அனுமதியின்றிச் சுவீகார புத்திரனைச் செய்துகொள்ளப்பட்டவன்
**கிருபணம்** - உலோபம்
**கிருபன்** - கிருபாசாரியன்
**கிருபாகடாட்சம்** - அருட்பார்வை
**கிருபாகரம்** - திருவரூர்
**கிருபாகரன்** - அருளுக்கு இருப்பிடமானவன்
**கிருபாசாரியன்** - கௌரவ பாண்டவரின் வில்லாசிரியருள் ஒருவன்
**கிருபை** - கருணை
**கிருமி** - புழு

கிருமிநிசயம் - இராசநரகம எட்டில ஒன்று
கிருமியுணு - ஒருவகை நரகம்
கிருஷி - வேளாண்மை
கிரேதம் } கிருதயுகம
கிரேதயுகம் }
கிரேனிடல் - அஞ்சி ஒடுங்குதல
கிலம் - சிதைந்தது, அறபம
கிலாசு - கப்பற்றொழிலாளி
கிலாம் - கோபம்
கிலாய்த்தல் - கோபித்தல, அங்கலாயத்தல
கிலி - பயம
கிலீபம் - அலி
கிலுகிலி - கிலுகிலுப்பை
கிலுகிலுத்தல் - ஒலித்தல், ஆரவாரிதகல்
கிலுகிலுப்பை - ஒலிசெய்யும் ஒரு விளையாட்டுக் கருவி, செடிவகை
கிலுக்கம் - பறவை வகை
கிலுக்கு - ஒலிக்கை
கிலுங்குதல் - ஒலித்தல
கிலுத்தம் - மணிககட்டு, மககள் வடிவான பழமுளள மரவகை
கிலேசம் - துக்கம்
கிலேதம் உடலின்மேலிடுமமருநது நீர்
கில்தல் - ஆற்றல்கொளளுதல்
கில்லம் - கழுத்து
கிழக்கத்தி } கிழக்குத் திசைக்குரிய
கிழக்கத்திய }
கிழக்கு - கீழ்த்திசை, கீழிடம, இழிவு, பளளம்
கிழங்கு - கொடி, செடி முதலியவற்றின் மூலம், காரணம்
கிழடு - முதியது
கிழத்தி - உரியவள், தலைவி
கிழமை-உரிமை, சிநேகம், குணம், வாரநாள்
கிழம் - முதுமை
கிழலை - திசை, மரககலததின் சாய்வுப்பக்கம்
கிழவது - உரியது
கிழவன் - உரியவன், தலைவன், மருதநிலத தலைவன், வயது முதிர்ந்தவன், பரணி
கிழவி - தலைவி, முதியவள்
கிழவு - கிழததனம்
கிழவோன் - உரியவன், தலைவன்
கிழாஅன் - தயிர், தயிர்ததாழி
கிழார் - வேளாளர் பட்டப்பெயர், தண்ணீர் இறைக்கும பொறி, தோட்டம்
கிழான் - உரியவன
கிழி - கிழிக்கப்பட்ட ஆடை, சீலையில் எழுதிய ஓவியம், பொருள் முடிப்பு
கிழிதம் - பொன் முடிப்பு
கிழிப்பு - கிழிக்கை, பிளப்பு, குகை
கிழியல் - கிழிவு, கிழிந்தது
கிழியீடு - பொன் முடிப்பு
கிளத்தல் } புலப்படக கூறுதல, விதந்து கூறுதல்
கிளத்துதல் }
கிளப்பம் - கிளர்ச்சி
கிளப்பு - எழுப்புகை, சொலலுகை
கிளப்புதல் - எழுப்புதல், நீக்குதல், உண்டாக்குதல
கிளம்புதல் - மேல்வருதல், மூண்டெழுதல், உண்டாதல
கிளராலயம் - ஒரு தமிழ்க் கணித நூல்
கிளர் - பூந்தாது, ஒளி
கிளர்தல் - மேலெழுதல், வளாதல, மிகுதல், விளங்குதல், சிறத்தல, உளளஎழுச்சி கொள்ளுதல், சினத்தல்
கிளர்வரி - நடிப்புவகை
கிளவி - மொழி, பேச்சு, அகப்பொருட்டுறை

**கிளவிக்கொத்து** - கோவைப்பிரபந்தத்தின் பல துறைகொண்ட அதிகாரம்

**கிளவிக்கோவை** - அகப்பொருள் கோவை

**கிளவித்தலைவன்** - அகப்பொருள் தலைவன்

**கிளவியாக்கம்** - தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் வழுவற மொழிகளை ஆக்குதற்குரிய விதிகளைக் கூறும் முதற் பகுதி

**கிளறுதல்** - கிண்டுதல், கலக்குதல், ஆராயுதல்

**கிளி** - பறவை வகை

**கிளிச்சிறை** - கிளிச் சிறகுபோன்ற நிறமுள்ள பொன்வகை

**கிளிஞ்சில்** - சிப்பி ஓடு

**கிளித்தட்டு** - ஒருவகை விளையாட்டு

**கிளிப்பிள்ளை** - இளங்கிளி

**கிளிமூக்கு** - சுவடிகளில் ஏடுவிழாமல் தடுக்க வைக்கும் ஓலைப் பிசுக்கு

**கிளியிடு** - கிளியினால் சேர்த்து வைக்கப்பட்ட கதிர்கள்

**கிளுகிளுத்தல்** - மகிழ்தல்

**கிளுவை** - செடி வகை, பறவை வகை

**கிளை** - கப்பு, தளிர், பூங்கொத்து, சுற்றம், இனம், ஓர் இசைக் கருவி

**கிளைஞர்** - உறவினர், மருதநில மக்கள், நட்பினர

**கிளைதல்** - நீக்குதல்

**கிளைத்தல்** - கிளைவிடுதல், பெருகுதல், நெருங்குதல், வளைதல், விளைதல்

**கிளைப்பு** - கவர்விடுகை, கிண்டுகை

**கிளைமை** - உறவு

**கிளையிதழ்** - புறவிதழ்

**கின்னாக்கு** - அதிகாரச் சீட்டு

**கின்னாப்பிரண்டு** - பிள்ளைகளின் விளையாட்டு

**கிள்ளி** - சோழர் பட்டப்பெயர்

**கிள்ளுக்கீரை** - கிள்ளியெடுக்கப்படும் கீரை, எளிமையானது

**கிள்ளுதல்** - நகத்தா லெடுத்தல், தோண்டுதல், அழித்தல்

**கிள்ளை** - கிளி, குதிரை

**கிள்ளைச்சாதம்** - கிளிக்குஞ்சு

**கிள்ளைவிடுதூது** - தலைவி காதலனிடம் கிளியைத் தூதுவிடுவதாகச் செய்யப்படும் பிரபந்தம்

**கிறி** - வழி, குழந்தையின் முன் கையிலணியும் சிறு பவளவடம், பொய், தந்திரம், மாயம்

**கிறிச்சிடுதல்** - கிறிச்சென்று ஒலித்தல்

**கிறிசு** - குத்துவாள்

**கிறித்தல்** - மாயஞ்செய்தல்

**கிறு** - ஒரு நிகழ்கால இடைநிலை

**கிறுகிறுத்தல்** - மயக்கமாதல், தலை சுழலுதல்

**கிறுகிறுப்பு** - தலைச்சுழற்சி

**கிறுகிறெனல்** - விரைவுக்குறிப்பு

**கிறுக்கல்** - தாறுமாறாக எழுதுகை,

**கிறுக்கன்**-கருவமுடையவன், பைத்தியக்காரன்

**கிறுக்கு** - உருத்தெரியாத எழுத்து, பைத்தியம், அகங்காரம்

**கிறுங்குதல்** - அசைதல்

**கின்று** - ஒரு நிகழ்கால இடைநிலை

**கின்னகம்** - தூக்கணங் குருவி

**கின்னம்** - துன்பம்

**கின்னரமிதுனம்** - ஆண் பெண் இரட்டை

**கின்னரம்** - இசை எழுப்பும்பறவை வகை, நீர்வாழ் பறவை, ஒரு வகையாழ், ஆந்தை

**கின்னரர்** - மனிதவுடலும் குதிரை முக முடையராய் இசைவல்ல தேவசாதியார்

கின்னரர்பிரான் - குபேரன்
கின்னரி - யாழ்வகை, கின்னருவப் பெண்
கின்னிக்கோழி - கினியா தேசத்துக் கோழி

## கீ

கீகசம் - எலும்பை ஒட்டிய தசை
கீசகம் - மூங்கில், குரங்கு, தலைச் சிரா
கீசகன் - விராட சேனாதிபதியாய் வீமனாற் கொல்லப்பட்டவன்
கீசர - சரக்கொன்றை
கீச்சி - பாசிமணியாலான கழுத் தணி
கீச்சிடுதல்-கீச்சென்று சத்தமிடுதல்
கீச்சு - அழுகை ஒலி, புள் ஒலி
கீச்சுக்கிட்டம் - இரும்புக்கிட்டம்
கீச்சுக்கீச்சுத்தம்பலம் - சிறுவர்விளை யாட்டு
கீடப்பகை - வாய் விளங்கம்
கீடமணி - மின்மினி
கீடம் - புழு, வண்டு
கீடனம் - கீழ்மை, கேடு
கீண்டல் - கிழிக்கை
கீதநடை - சாமவேதம்
கீதம் - இசைப்பாட்டு, இசை, வண்டு, மூங்கில்
கீதவேதம் - சாமவேதம்
கீதாங்கம் - கீதத்துக்கு வாசிக்கும் வாச்சியக்கூறு
கீதி - பாட்டு, கருங்காலி
கீதை - பகவற்கீதை, நல்லநீதி களைக் கூறும் தெய்வப் பாடல்
கீரந்தை - இடைச்சங்கப் புலவருள் ஒருவர்
கீரம் - கிளி, பால், நீர்
கீரவாணி - ஓர் இராகம்
கீரன் - நக்கீரன்
கீரி - கீரிப்பிள்ளை
கீரை - இலைக்கறி
கீரைப்பாம்பு - வயிற்றிலுண்டாகும் நாகப்பூச்சி
கீரைமணி - கழுத்திலணியும் ஒரு வகைப் பாசிமணி
கீர் - சொல்
கீர்த்தனம் } இசைப்பாட்டு
கீர்த்தனை }
கீர்த்தி - புகழ்
கீர்த்தித்தானம் - சென்மலக்கினம்
கீர்த்திப்பிரதாபம் - புகழும் ஆற்ற லும்
கீர்வாணம் - வடமொழி
கீலக - ஓர் ஆண்டு
கீலகம்-தந்திரம், ஆணி, பொருத்து
கீலம் - ஆணி, சுடர்க்கொழுந்து, பிசின், கிழிதுண்டம், வெட்டு
கீலாரி - இடையர் தலைவன்
கீலாலம் - நீர், இரத்தம்
கீலி - தந்திரமுள்ளவன்
கீலுதல் - கிழித்தல்
கீலெண்ணெய் - தார்
கீல் - உடற்பொருத்து, கதவின் பிணைப்பு, தார்
கீழங்கம் - பின்னத்தின் கீழ்த் தொகை
கீழண்டை - கிழக்குப்பக்கம், கீழப் புறம்
கீழறுதல் - சேனைகளின் படைப் போக்குப் பகைவரால் பேதிக் கப்படுதல்
கீழறுத்தல் - சதிசெய்தல், நிலத் தில் சுரங்கஞ் செய்தல்
கீழறை - நிலவறை
கீழாநெல்லி - கீழ்வாய்நெல்லி
கீழிசை - பாடுதற் குற்றங்களுள் ஒன்று
கீழிடுதல் - தாழ்த்துதல்
கீழுலகு - நாகலோகம்
கீழோங்கி - செம்படவரிற் கீழ்க் குலத்தார்

**கீழோர்** - தாழ்ந்தோர், உழவர்
**கீழ்** - கீழிடம், கிழக்கு, பள்ளம், பிற்காலம், குற்றம், கயமை, இழிந்தவன், மறதி
**கீழ்க்கடை** - கடந்துபோன நாட்கள், இழிந்தது
**கீழ்க்கணக்கு** - வெண்பாவினால் அறம் பொருள் இன்பங்களைப் பற்றிக் கூறும் நூல்வகை
**கீழ்காற்று** - கிழக்கினின்று வீசுங் காற்று
**கீழ்சாதி** - இழிகுலம்
**கீழ்தல்** - கிழிதல்
**கீழ்த்திசை** - கிழக்கு
**கீழ்நிலை** - தாழ்ந்த நிலைமை, கீழ் மாடம், நிலவறை
**கீழ்நோக்கிராசி** - நிலத்தில் நடுகை கிணறு வெட்டுகை முதலிய பயற் றுக்கேற்ற கர்க்கடகம் விருச் சிகம் என்னும் இராசிகள்
**கீழ்பால்விதேகம்**-நவ கண்டங்களுள் ஒன்று
**கீழ்ப்படிதல்** - அடங்கி நடத்தல்
**கீழ்ப்படுதல்** - அடங்குதல், இழிவு படுதல்
**கீழ்ப்பால்** - கீழ்சாதி
**கீழ்மக்கள்** - இழிந்தோர்
**கீழ்மகன்** - கீழ்சாதியான், இழிந்த வன், சனி
**கீழ்மடை** - கடைமடை, நீர்பாய்தற் குத் தூரமான நிலம்
**கீழ்மரம்** - நச்சுமரம்
**கீழ்மேலாதல்** - தலைகீழாதல்
**கீழ்மை** - இழிவு
**கீழ்வயிறு** - அடிவயிறு
**கீழ்வாய்** - மோவாய்
**கீழ்வாய்நெல்லி** - கீழாநெல்லி
**கீழ்வாயிலக்கம்** - ஒன்றுக்குக் கீழ்ப் பட்ட எண்வாய்ப்பாடு
**கீழ்வு** - கீழிடம்
**கீளி** - கடல்மீன்வகை
**கீளுதல்** - கிழித்தல், உடைதல்
**கீள்**-கூறு, அரையிற்கட்டும் துணி
**கீறல்** - கிழிகை, வரிவகை
**கீறு** - பிளப்பு, வரி, துண்டம்
**கீறுதல்** - வரிகீறுதல், எழுதுதல், கிழித்தல், விரலால் பறண்டு தல், ஆயுதத்தால் அறுத்தல், வகிர்தல், குறிப்பித்தல், கடத் தல்
**கீற்பிடிப்பு** - வாதபிடிப்பு
**கீற்று** - வரி, துண்டு, கூரைவேயுங் கிடுகு, உயிர்க் குற்றத்தில் ஒன்று
**கீற்றுமதி** - மூன்றாம்பிறைச் சந்தி ரன்
**கீன்றல்** - கீறுகை
**கீனம்** - இழிவு, குறைவு

## கு

**கு** - நான்கனுருபு, ஒரு சாரியை, பூமி, நிறம்
**குகப்பிரியா** - ஓர் இராகம்
**குகரம்** - மலைக்குகை, சுரங்கம்
**குகரர்** - சாகத் தீவில் வாழும் ஒரு சாதியார்
**குகவேளாளர்** - செம்படவர் சிலர்க்கு வழங்கும் சாதிப் பெயர்
**குகு** - வசை, தச நாடிகளு ளொன்று
**குகுரம்**-ஐம்பத்தாறு தேசங்களுள் ஒன்று
**குகை** - மலைக்குகை, முனிவர் இருப் பிடம், சிமிழ், உலோகங்களை உருக்கும் கலம், சமாதியறை
**குகை நமச்சிவாயர்** - 18-ஆம் நூற் றாண்டில் வாழ்ந்த புலவர்-அரு ணகிரி அந்தாதி பாடியவர்
**குக்கர்** - மிக இழிந்தோர்
**குக்கல்** - கக்குவான், நாய்
**குக்கன்** - நாய்

**குக்கி** - வயிறு
**குக்கில்** - செம்போத்து, குங்கிலியப் பிசின்
**குக்குதல்** - இருமுதல்
**குக்குடசர்ப்பம்** - வயதுநீடித்தலால் உடல் குறைந்து கோழிபறக்கு மளவு பறந்து செல்லுமதன் மையான பாம்பு
**குக்குடதீபம்** - கோழி வடிவான கோயில் விளக்கு
**குக்குடம்** - கோழி, குக்குடசர்ப்பம்
**குக்குடாசனம்** - இரு பாதங்களையும் கீழ்வைத்துக் குந்தியிருந்து யோகஞ் செய்யும் ஆசனம்
**குக்குலு** } குங்குலியம்
**குக்குலுவம்** }
**குக்கூடல்** - முட்டாக்கு
**குக்கூவெனல்** - கோழி கூவுமொலிக் குறிப்பு
**குங்கிலியக்கலநாயனார்** - அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவர்
**குங்கிலியம்** - ஒருவகைமரம்
**குங்குதல்** - குன்றுதல்
**குங்குமச்சோரன்** - குதிரையில் ஒரு சாதி
**குங்குமப்பூ** - குங்கும மரத்தின் பூ
**குங்குமம்** - ஒருவகைச் செடி, செஞ்சாந்து
**குங்குலு** - குங்குலிய மரம்
**குசக்காணம்** - குசவர் செலுத்தும் பழைய வரி
**குசம்** - தருப்பை, நீர், மரம், பெண்ணின் தனம்
**குசலம்** - சேமம், நற்குணம், மாட்சிமை, சாமர்த்தியம்
**குசலவித்தை** - எண்ணல், எழுதல், இலைகிள்ளல், பூத்தொடுத்தல் யாழ் வாசித்தல் முதலிய மகளிர்க்குரிய விநோதக் கைத்தொழில்கள்
**குசலன்** - மிக வல்லோன்
**குசவம்** - கொய்சகம்
**குசன்** - செவ்வாய்
**குசால்** - மனக்களிப்பு, நடையுடைகளின் மினுக்கு
**குசிகன்** - விசுவாமித்திரன் தந்தை
**குசு** - அபான வாயு
**குசுகுசெனல்** - காதுக்குள் ஓதுதற் குறிப்பு
**குசுமம்** - பூ
**குசூர்** - அசாக்கிரதை
**குசேசயம்** - தாமரை
**குசேலன்** - கண்ணன் நண்பனாகிய ஒரு முனிவன்
**குசை** - தருப்பை, குதிரை வாரக் கயிற்றில் சேர்த்து முடியும் கயிறு, கடிவாளம், மகிழ்ச்சி, குதிரைப் பிடரி மயிர்
**குசைத்தீவு** - ஏழு தீவுகளுள் ஒன்று
**குச்சம்** - கொத்து, அலங்காரக் குஞ்சம், நாணல்
**குச்சரம்** - கூர்ச்சரம்
**குச்சரி** - ஓர் இராகம், முற்காலத்து வழங்கிய துகில் வகை
**குச்சரித்தல்** - அருவருப்புக் கொள்ளுதல்
**குச்சி** - மரக் குச்சி, முகடு
**குச்சிகை** - வீணை வகை
**குச்சிதம்** - இழிவு
**குச்சித்தல்** - அருவருத்தல்
**குச்சில்** - சிறிய வீடு, குச்சுப்புல்
**குச்சிலியர்**-கூர்ச்சரதேசத் தலைவர்
**குச்சு** - மரக்குச்சு, சிறுகுடில், குஞ்சம், குஞ்சுப்புல், பாவாற்றி எனனும் நெசவுக கருவி
**குச்சுக்காரி** - இழிந்த வியபிசாரி
**குச்சுமணி** - மகளிர்கழுத்தணி
**குச்செறிதல்** - மயிர் சிலிர்த்தல்
**குச்சை** - கொய்சகம்
**குஞ்சம்** - குறளை, கூன், குறளை, பூங்கொத்து ஈ யோட்டி, குன்றி, காழி

**குஞ்சரக்குரலகுருகு** - யானையங்குருகு என்னும் புள்
**குஞ்சரம்** - யானை, கருங்குவளை
**குஞ்சரணி** - எழுத்தணி வகை
**குஞ்சரவொழுகை** - யானை பூட்டிய வண்டி
**குஞ்சரி** - தெய்வயானையார்
**குஞ்சன்** - குறளன்
**குஞ்சாமணி** - ஆண் குழந்தைகளின் அரையில் கட்டும் மணி விசேடம்
**குஞ்சி** - குடுமி, யானை, மயில் முதலியவற்றின் உச்சி மயிர், தலை, விருத, சிறுமையானது, பறவைக் குஞ்சு
**குஞ்சிதம்** - வளைந்தது
**குஞ்சித்தல்** - கால் தூக்கி வளைதல்
**குஞ்சியப்பன்** - தந்தையின் தம்பி, தாயின் இரண்டாம் கணவன்
**குஞ்சு** - பறவைக்குஞ்சு, எலி, அணில் முதலியவற்றின் பிள்ளை
**குஞ்சுறை** - பறவைக்கூடு
**குஞ்சை** - நெய்வோர் பாவில் தேய்க்கும் குஞ்சம்
**குட** - வளைந்த
**குடகச் செலவு** - யாழில இசைபடவாசிக்கும் வகையுள் ஒன்று
**குடகம்** - மேற்கு, குடகுமலை
**குடகன்** - சேரன், மேல் நாட்டான்
**குடகாற்று** - மேல்காற்று
**குடகு** - மேற்கு
**குடக்கம்** - வளைவு
**குடக்கனி** - பலாப்பழம்
**குடக்கால்** - குடம்போன்ற விளக்குத் தண்டு
**குடக்கு** - மேற்கு
**குடக்கூத்து** - கண்ணன் குடமெடுத்தாடிய கூத்து
**குடக்கோ** - சேரன்
**குடங்கர்** - குடம், கும்பராசி குடிசை
**குடங்கால்** - மடி
**குடங்குதல்** - வளைதல
**குடங்கை** - உள்ளங்கை
**குடசப்பாலை** - கசப்பு வெட்பாலை
**குடசம்** - குடசப்பாலை, மலைமல்லிகை
**குடச்சூல்** - பாதச் சிலம்பு வகை
**குடஞ்சுட்டவர்** - மாட்டிடையா
**குடஞ்சுட்டு** - பசு
**குடதாடி** - தூணின்மேல்வைக்கும குடவடிவான உறுப்பு
**குடதேவர்** - அகத்தியர்
**குடத்தி** - இடைச்சி
**குடநாடன்** - சேரன்
**குடநாடு** - மேலநாடு, செந்தமிழ நாட்டைச் சூழ்ந்த பன்னிரண்டில ஒன்று
**குடந்தம்** - குடம், கைகூப்பி வளைந்து வழிபடுகை
**குடந்தம்படுதல்** - வழிபடுதல்
**குடந்தை** - வளைவு, கும்பகோணம
**குடபலை** - மணித்தக்காளி
**குடப்பறை** - குடவடிவான பன்றிப் பறை
**குடப்பாம்பிற்கையிடுதல்** - பாம்பை அடைத்த குடத்தில் கையிட்டுச் சத்தியஞ் செய்தல்
**குடப்பாம்பு** - மதிற்பொறி வகை
**குடப்பிழுக்கை** - வரிக்கூத்துவகை
**குடமலை** - குடகுமலை
**குடமுழா** - முழவு வாத்தியவகை
**குடமூக்கு** - கும்பகோணம்
**குடம்** - நீர்க்குடம, கும்பராசி.பசு, பூசம், குடநாடு, கரும்புக்கட்டி, சதுரக்கள்ளி
**குடம்பை** - முட்டை, கூடு
**குடர்** - குடல்
**குடலை** - பூக்குடலை, பழக்கூடு, கதிர்க்குடலை

**குடல்**-இரைப்பையைத் தொடாந துள்ள குழாய்
**குடவர்** - குடநாட்டினர்
**குடவன்** - இடையன், கணிகை, ஒருவகை உண்ணி
**குடவியிடுதல்** - வளைத்து அகப்படுத்துதல்
**குடவு** - குகை, வளைவு
**குடவோலை** - சபையோரைத்தெரிந்தெடுக்கக் குடததிலிடும் ஓலை நறுககு
**குடற்பிடுங்கி** - துரிசு
**குடற்போர்வை** - கருப்பை
**குடா** - வளைவு, குடைவு, மூலை
**குடாகாயம்** - குடத்தால் அளவு படுததப்பட்ட ஆகாயம்
**குடாக்கடல்** - மூன்று பக்கம்தரை சூழநத கடல
**குடாசகம்** - கபடம்
**குடாது** - மேற்கு, மேற்கிலுள்ளது
**குடாரம்** - கோடரி, தயிர கடைதறகு நட்ட தறி, தயிர்கடை தாழி
**குடாரி**-கோடாரி, யானைத்தோட்டி
**குடாவடி** - கரடி
**குடி** - பருகுகை, புருவம, குடியானவன், ஆட்சிக்குட்பட்ட மக்கள, குடும்பம், வமிசம, குலம், ஊர், வாழவிடம
**குடிகேடு** - குடுமபநாசம்
**குடிகை** - பாணசாலை, கோயில், கமண்டலம்
**குடிகொள்ளுதல்** - நிலையாகத தங்கியிருத்தல்
**குடிகோள்** - உபாயத்தால் குடியைக் கெடுககை
**குடிக்காடு** - ஊர்
**குடிக்கரணம்** - குடிவரி
**குடிக்குச்சகுனி** - குடியோட்டிப் பூணடு
**குடிக்கூலி** - வீட்டு வாடகை
**குடிங்கு** - பறவை
**குடிசனம்**-நாட்டில் வாழும மககள
**குடிசெய்தல்** - பிறந்த குடியை உயர்த்தல, வசிததல
**குடிஞை** - சிறு குடில
**குடிஞை** - நதி,குடிசை,சோட்டான், பறவை
**குடிஞைக்கல்** - சோழா காலதது வழங்கிய ஒருவகை நிறைக்கல
**குடிஞைப்பள்ளி** - கண்ணுளாளா தஙகும நாடக வரங்கின் பகுதி
**குடிதாங்கி** - குலத்தைத தாஙகு பவன
**குடிதாங்கிக்கோல்** - ஒரு பழைய அளவுகோல்
**குடிதிருத்துதல்** - ஆட்சிககுட்பட்ட குடிகளை நன்னிலையில் நிறுத்துதல
**குடித்தனக்காரன்** - பயிரிடுவோன், வீட்டில் செல்வாக்குளளவன், வீட்டுக தலைவன்
**குடித்தனம்** - இல்வாழக்கை
**குடித்தெய்வம்** - குலதெய்வம்
**குடிநற்கல்** - குடிஞைக்கல்
**குடிநிலம்** - குடியிருக்கும் மனை நிலம்
**குடிநிலை** - வீரக்குடியின் புகழையும அஞ்சாமையையும கூறும் புறத்துறை
**குடிநீர்** - குடித்தற்குரிய நீர, கியாழம
**குடிபுகுதல்** - வீட்டில் வசிக்கச் செலலுதல், நுழைதல
**குடிபோதல்** - இருப்பிடததை விட்டு வெளியேறுதல, குடிபுகுதல், பண்டம காறறாகவேனும் ஆவியாகவேனும கரைதல
**குடிப்பழி** - குலததுக்கு ஏற்பட்ட நிநதை
**குடிப்பாங்கு** - குடியானவன் பின்பற்றும் ஒழுங்கு

குடிப்பாழ் - குடிகளைவிட்டு நீங்குதலால ஊருக்கு உண்டாகும் அழிவு
குடிப்பிறப்பு - உயர்குடியிலுதித்தல் ஆகை
குடிப்பெயர் - பிறந்த குலம் பற்றி வரும் பெயர்
குடிமகன் - நற்குடும்பத்திற் பிறந்தவன், பரம்பரைக் குடிமகன், அடிமை
குடிமக்கள் - பணி செய்தற்குரிய 18 வகைக் கிராமக் குடிகள்
குடிமிராசு - பரம்பரை உரிமை
குடிமை - உயர் குலத்தார் ஒழுக்கம், பிறந்த குடியை உயர்ச் செய்யுந்தன்மை, குடிப்பிறப்பு அடிமை, குடிகளிடமிருந்து பெறும் வரி
குடிமைப்பாடு - ஊழியம்
குடியரசு - பிரசைகளால் நடத்தப்படும் அரசாங்கம்
குடியானவன் - பயிரிடுவோன்
குடியிருக்கை - கிராமத்திற்குடிகள் தங்கியிருக்கும் இடம்
குடியிருத்தல் - வசித்தல்
குடியிருப்பு - வாழ்வு, குடியிருக்கை கிராமம்
குடியிறை - குடிகள் செலுத்தும் வரி
குடியேறுதல் - தமநாடுவிட்டு வேறு நாடு சென்று வசித்தல்
குடிலம் - வளைவு, சடை, வஞ்சகம் உள்ளவாகப்பாடும் இசைத் தொழில், குரா, ஈயமணல், வெள்ளீயம்
குடிலை - பிரணவம், சுத்தமாயை
குடில் - குடிசை, ஆகாயம்
குடிவாழ்க்கை - இல்வாழ்க்கை, வாழ்வின் ஒழுங்கு
குடீசம் - சன்னியாசம்
குடீரம் - குடிசை, பார்ப்பனசாலை
குடு - கள்
குடுக்கை - குடுக்கை
குடுகுடுத்தல் - ஒலித்தல்
குடுகுடுப்பை - குடுகுடுவென்று ஒலிக்கும் பொருள்
குடுப்பம் - நான்கு பலம் உள்ள அளவு
குடுமி - ஆண் மக்களது மயிர், மாடத்தின் உச்சி, தலை உச்சி, உச்சிக்கொண்டை, நுனி, கிரீடம் கதவின் குடுமி, முடிவு, வெற்றி
குடுமிக்கூந்தல் - உச்சிக் கூந்தல்
குடுமிகொள்ளுதல் - வெல்லுதல்
குடும்பத்தானம் - இலக்கினத்துக்கு இரண்டாவதாகிய இடம்
குடும்பபாரம் - குடும்பத்தைத் தாங்கும் பொறுப்பு
குடும்பன் - குடும்பத் தலைவன்
குடும்பி - சமுசாரி
குடும்பினி - மனைவி
குடும்பு - காய் முதலியவற்றின் குலை
குடுவை - வாய்குறுகிய குண்டுப் பாத்திரம், கமண்டலம், சிறு கலம்
குடை - கவிகை, அரசாட்சி, மிதி அடியின் குமிழ், நீருண்ணும் ஓலைப்பட்டை, குடைவேல், கவிப்பு
குடைகரி - பொன்னுருக்கும் கரிக் குகை
குடைக்காம்பு - குடையின் கைப் பிடி
குடைக்கூத்து - முருகனாடல்
குடைச்சூல் - சிலம்பு, உள்ளிடம் குடைவு படுகை
குடைச்செலவு - எதிர்த்து வந்த படையைத் தடுத்தற்காகச் செல்லு முன் தன் கொற்றக் குடையை நல வேளையில புற

வீடு விடும் காஞ்சித திணைத துறை

**குடைதல்** - துளைத்தல, நீரில்மூழ்கு தல், உணவு எடுததல், கிண்டு தல

**குடைநாட்கோள்** - பகையரணைக் கொள்ள நினைந்துமேற்சென்ற வேநதன், தன் குடையை நல வேளையில் புற வீடு செய்யும உழிஞைத்துறை

**குடைநிலை** - பகை மேறசெல்லும் அரசன் தன் குடையை நல வேளையிற் புறவீடுவிடும் வஞ சித திணைத்துறை

**குடைந்தாடுதல்** - அமிழ்ந்து நீராடு தல்

**குடைமங்கலம்** - நான் கு திக கு ம, கீாததிமிக வீற்றிருந்த அரச னது குடையைப் புகழ்ந்து கூறும பாடாண்துறை

**குடைமுல்லை** - போரில வெற்றி கொண்ட அரசனது குடை யைப்புகழுநது கூறும வாகைத துறை

**குடையோலை** - இழிந்த சாதியார் உடைடறகுரிய ஏனமா னஓலைப் பட்டை

**குடைவிருத்தி** - விழாக காலததில சுவாமிகளுக் குடை பிடிபபதற காக ஏற்பட்ட மானியம்

**குடைவு** - பொந்து, குகை

**குடைவேல்** - உடை

**குடோரி** - கிறுகை, மண்டையைக கிறி மருந்திடுகை

**குட்சி** - வயிறு

**குட்டநாடு** - கொடுந தமிழ் நாடுக ளுள ஒன்று

**குட்டம்** - சிறுமை, குரங்குக குட்டி, குட்டநோய், ஆழம, மடு, குட்ட நாடு, பரப்புள்ள இடம, திரள், சபை

**குட்டன்** - சிறு பிள்ளை, ஆட்டு குட்டி

**குட்டான்** - ஓலைப்பெட்டி

**குட்டி** - விலங்கின் பிள்ளைப்பொது

**குட்டிக்கரணம்** - தலைகீழாகப் பாய் வுமவிதத்தை, பெருமையறசி

**குட்டிச்சாத்தான்** - குறளிதநேவதை

**குட்டிச்சுவர்** - இடிநதசுவர், பாழ் மனை

**குட்டித்தொல்காப்பியம்** - இலககண விளக்கம்

**குட்டிமம்** - கலபாவினதரை

**குட்டியாண்டவன்** - பட்டனவா வணங்கும தெய்வம

**குட்டியாத்தாள்** - சிறியதாய்

**குட்டினி** - கறபழிந்தவள், கூட்டிக் கொடுப்பவள

**குட்டு** - கைமுட்டியால தலையில இடிக்கை, இரகசியம

**குட்டுணி** - பிறரால குட்டுண்டவன

**குட்டுதல்** - கைமுட்டியாலதலையில இடிததல

**குட்டுவன்** - சேரன, குட்டநாட்டி லுளளவன்

**குட்டேறு** - சிறிய காளை, எருதின் திமில

**குட்டை** - குறுகிய உருவம், சிறு துணி, சிறுகுளம், குறுணி, குட்டம

**குணகாங்கியம்** - பழைய ஒரு கன்னடயாப்பு நூல

**குணகாரம்** - பெருககல

**குணகு** - பூத பிசாசம

**குணகுதல்** - வளைதல, மனநதளா தல

**குணகோளார்த்தம்** - பூமியின் கிழக குப் பாதிகோளம

**குணங்கர்**
**குணங்கு** } பூதபிசாசம

**குணங்குறி** - தன்மையும் வடிவும

குணசந்தி - அ, ஆ முன் இ, ஈ வந்தால் அவ்விரண்டுங் கெட ஏகாரமும், உ, ஊ வந்தால் அவ்வாறே ஓகாரமுந் தோன்றும் மொழிச் சந்தி
குணசாகரர் - யாப்பருங் கலக்காரிகையின் உரையாசிரியர்
குணசீலன் - நற்குண நற்செய்கைகளுடையவன்
குணஞ்ஞன் - பிறர் நற்குணங்களை யறிந்து மகிழ்பவன்
குணதரன் - முனிவன், நற்குணமுள்ளவன்
குணதிசை - கிழக்கு
குணத்திரயம் - சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் மூவகை மூலகுணங்கள்
குணத்தோரணம் - பணபுத்தோரணை
குணத்தொனி - வில்லின் நாணொலி
குணநாற்பது - நாற்பது பாடலாகிய சிறந்த ... ஒரு பழையநூல்
குணநிதி - நற்குண நிறைந்தவன்
குணநூல் - நாடகத் தமிழ் நூல்களுள் ஒன்று
குணபம் - சுடுகாட்டிலுள்ள பிசாசு
குணபாகம் - அனுகூலமான நிலை
குணபாசி - பிணம் தின்னும்பிசாசு
குணப்படுதல் - சுகமடைதல், சீர்ப்படுதல்
குணப்பண்பு - தன்மையைக் குறிக்கும் பண்புச் சொல்
குணப்பெயர் - பண்பு குறிக்கும் பெயர்ச்சொல், பண்படியாகப் பிறந்த பெயர்ச்சொல், சிறப்பியல்பு பற்றி மக்கட்குப்புலவரால்கொடுக்கப்பட்டு வழங்கும் பெயர்
குணமாதல் - சௌக்கியமாதல்
குணம் - பொருளின் தன்மை, ஒழுக்கத் தன்மை, கொள்கை, அனுகூலம், நிறம், கயிறு, வில்லின் நாண், குடம்
குணலை - ஆரவாரத்துடன் நடிக்கும் கூத்து, வீராவேசத்தாற் கொக்கரிக்கை, நாணத்தால் உடல் வளைகை
குணலையிடுதல் - இரைந்து கூத்தாடுதல்
குணவந்தன் - நற்குண முடையவன், குண விரதம் அனுட்டிப்பவன்
குணவதி - நற்குணமுடையவள்
குணவந்தன் - குணவான்
குணவாகடம் - நோய்க் குறிகளைக் கூறும் ஒரு வைத்திய நூல்
குணவாகுபெயர் - பண்புப் பெயர் பண்மிக்கு ஆவது
குணவாயில் - கீழ்த்திசை
குணவியது - மேன்மையானது
குணவிரதம் - மகா விரதத்துக்கு அங்கமாகக் கொள்ளப்படும் ஒரு சைவ நோன்பு
குணவீரபண்டிதர் - நேமிநாத நூலாசிரியர் (13-ஆம் நூற்றாண்டு)
குணனம் - பெருக்கல்
குணனீயம் பெருக்கப்படுந்தொகை
குணகுணம் - நன்மையும் தீமையும்
குணக்கிரநியாயம் - மரம் புத்தகம் முதலியவற்றில் புழுவின் அரிப்பு எழுந்தாற்போலத் தற்செயலாக நேர்வதைக் குறிக்கும் நெறி
குணட்டம் - வரிக்கூத்துவகை
குணதிசயம் - குணவிசேடம்
குணதீதம் - குணங்கடந்தது
குணது - கிழக்கிலுள்ளது
குணலம் - ஒருவகை மகிழ்ச்சிக் கூத்து, வீராவேசத்தால் கொக்கரிக்கை, ஒரு பறவை
குணவன் - நற்குணமிக்கவன்
குணி - குணமுள்ளது, மூடமானது, சொத்தைக்கையன்

குணிதம் - பெருககிவநத தொகை, மடங்கு
குணித்தல் - கணிததல, ஆலோசித தல, வரையறுததல்
குணிப்பு - அளவு, ஆராய்ச்சி, மதிப்பு
குணில் - குறுநதடி, பறையடிக்கும தடி, கவண்
குணு - புழு
குணுகுதல் - கொஞ்சுதல
குணுக்கு - கடிப்பிணை என்னும காதணி
குணுங்கர் - இழிந்தோர, புலையர், தோறகருவியாளர், குழற்கருவி வாசிப்போர்
குணுங்கு-பேய், கொச்சைநாற்றம
குண்டகன் - சோரபுருடனுக்குப் பிறந்தவன்
குண்டக்கணிகை - கறபழிந்து வேசையானவள்
குண்டக்கம் - கோள், வஞ்சனை
குண்டக்கிரியை - ஓர் இராகம்
குண்டணி - குறளைச்சொல
குண்டம் - ஓமகுண்டம், வாவி, பானை, கற்பழிந்தவள
குண்டலகேசி-ஒரு பெளத்தத்துறவி, பஞ்ச காவியததுள் ஒன்று—நாககுததனர் செய்தது
குண்டலப்பூச்சி - வளைந்து சுருண்டு கொளளும் புழுவகை
குண்டலம் - ஆடவர் காதணி, ஆகாயம, வட்டம்
குண்டலி - நாபித்தானம், மூலாதாரம, சீநதில், கஞ்சஞ்செடி, சுத்தமாயை
குண்டலினி - மகாமாயை, மூதலாதாரததிலுள்ள பாமபின் வடிவமைந்த ஒரு சக்தி
குண்டற்கச்சி - தென்னைவகை
குண்டன் - வியபிசாரததிற் பிறந்தோன், இழிந்தோன்
குண்டரக்கன் - தலைவன்
குண்டாந்தடி - பருத்துக் குறுகிய தடி
குண்டான்சட்டி - வாயகன்ற பாத்திரவகை
குண்டி - ஆசனப்பக்கம, மூததிராசயம்
குண்டியம் - குறளை
குண்டு-பந்துபோல உருண்டு கனமானது, நிறைக்கல வகை, ஆண் குதிரை, ஆழம், தாழவு, சிறு வயல்
குண்டுக்கலம் - 24 மரக்கால கொண்ட ஓரளவு
குண்டுக்கழுதை - ஆண் கழுதை
குண்டுச்சட்டி - உருண்டையான சட்டிவகை
குண்டுணி - கலகமூட்டுகை, கோளசொல்லுவோன், கோட்சொல்
குண்டுநீர் - கடல
குண்டுமரக்கால்-எட்டு படிகொண்ட ஓரளவு
குண்டூசி - தலைதிரண்டுள்ள ஊசி
குண்டை - எருது, இடபராசி, குறுகிய தடிததது, குறுமை
குண்டோதரன் - சிவகணததாருள் ஒருவன்
குதட்டுதல் - குதப்புதல, குழறிப் பேசுதல்
குதப்புதல் - மெலலுதல்
குதம் - தீ வளர்ததுச் செய்யும் ஓமம், மலஙகழிக்கும் வாயில், துமமல, தருப்பை
குதம்பை - காதில் இடும் ஓலைச் சுருள, காதணி வகை
குதம்பைச்சித்தர் - சித்தருள் ஒருவர்
குதர் - பிரிவு
குதர்க்கம் - விதண்டாவாதம்
குதர்செல்லுதல்-நெறிதவறிச் செல்லுதல்

**குதர்தல்** - கோதியெடுத்தல், அடியோடெடுத்தல், குதர்க்கவாதம் பண்ணுதல்
**குதலை** - மழலைச் சொல், இனிய மொழி, அறிவிலலான
**குதலைமை** - பொருளவிளங்காமை, தளர்ச்சி
**குதறுதல்** - சிதறுதல், நெறிதவறுதல், நலிதல்
**குதற்று** - நெறி தவறுகை
**குதம்**-அசட்டை, துப்புரவின்மை
**குதலைக்கேடு** - துப்புரவின்மை
**குதி** - குதிக்கால், குதிப்பு
**குதித்தல்** - பாய்தல், எழும்பி விழுதல், கூத்தாடுதல், கடந்து விடுதல்
**குதிப்பு** - குதிக்கை, கருவங் கொள்கை
**குதிரம்** - 35 கழஞ்சளவுள்ள காப்பூரம்
**குதிரி** - அடங்காதவள
**குதிரை**-பரி, யாழின் ஓர் உறுப்பு, ஊர்க்குருவி, அதியமானின் குதிரை மலை
**குதிரைக் கயிறு** - குதிரையின் கடிவாளம்
**குதிரைக்கலணை**-குதிரைச் சேணம்
**குதிரைக்குளம்படி** - நீர்ச்சேம்பு
**குதிரைக்கொம்பு** - கிடைத்தற்கரியது
**குதிரைச்சம்மட்டி** - குதிரைச் சவுக்கு
**குதிரைச்சாரி** - குதிரையின் சுற்றிப் போடும் கதி
**குதிரைச்சேவகன்** - குதிரை வீரன்
**குதிரைத்தறி**-நீருடைப்பை அடைத்தற்கு வைக்கோல் முதலியவற்றோடு நிறுத்தும் மரச் சட்டம்
**குதிரைநிலை** - குதிரைலாயம்
**குதிரைப்பந்தி** - குதிரைலாயம்
**குதிரைமறம்** - போர்க்குதிரையின் திறப்பாட்டைக் கூறும் புறத்துறை
**குதிரைமுக வோடம்** - குதிரையின் உருவை முகப்பிற்கொண்ட தோணி
**குதிரைமுன்** - குதிரையைச் செலுத்த தவோர் காலில் இட்டுக்கொள்ளும் முள
**குதிரையிராவுத்தன்** - குதிரைவீரன
**குதிரையேற்றம்**-குதிரையேறி நடத்தும் வித்தை
**குதிரை வடிப்போர்**-குதிரை நடத்துவோர்
**குதிரைவலி** - பெண்களுக்குப் பிள்ளைப்பேற்றுக் காலத்தில் உண்டாகும் பெருவலி
**குதிரைவையாளிவீதி**-குதிரை செலுத்துதற்குரிய செண்டுவெளி
**குதிர்** - ஒருவகை மரம், நெல் முதலின வைக்கும் கூடு
**குதுகலம்** - மனக்களிப்பு
**குதுகுதுத்தல்** - ஆசைப்படுதல
**குதுகுலம்** - குதூகலம்
**குதூகலம்** - மனககளிப்பு
**குதை** - அம்பினடி, அம்பு
**குதைதல்** - செலுத்துதல், தடுமாறச் செய்தல், பசி
**குதைத்தல்** - விற்குதையில் நாணைப் பூட்டுதல்
**குத்தம்** - எருது
**குத்தலரிசி** - குற்றிததீட்டிய அரிசி
**குத்தல்** - நோவச்செய்கை, ஊன்றல், தின்னல்
**குத்தன்** - காப்பவன், வணிகா பட்டப்பெயர், குப்தவமிசத்து அரசன்
**குத்தாலம்** - திருவாததி
**குத்தி** - கலபபைக் கூர், குத்தியெடுகககும் கருவி, திரிகரண அடககம், குப்பி, மண், மாறுபாடு
**குத்திரம்** - வஞ்சகம், இழிவு, மலை
**குத்து** - கை முட்டியால் தாக்கும்

இடி, உரலிற்குத்துவகை, புள்ளி, நோவு, பிடி
குத்துக்கரணம் - குட்டிக்கரணம்
குத்துக்கால் - தாங்குகால். தடை
குத்துக்கோல்-தாற்றுக்கோல், பரிக்கோல, முனையில் கூரிய இரும்பு உள்ள கோல்
குத்துதல் - துளையிடுதல், ஆயுதங்களால் குத்துதல், தைத்தல், இடித்தல், களைதல், பறவை கொத்துதல், தின்னுதல், ஊன்றுதல், கிண்டுதல்
குத்துவான் - உடைவாள்
குத்துவிளக்கு - நிலையாக நிறுத்தும் விளக்கு
குத்தூசி - குத்தித் தைக்கும் ஊசி
குந்தணை-காய்ச்சும்போது பாத்திரம் சிதையுமாயின் தைலம் வீணாகாமல் காத்தற்பொருட்டு அப்பாத்திரத்துக்கு ஆதாரமாக வைக்கப்படும் இரும்பு அண்டா
குந்தம்-குதிரை, 4 பலங்கொண்ட ஒரு நிறை, துக்கந்தருவது, எறிகோல், வேல், குத்துக்கோல், குருந்து, குபேரன் நவநிதிகளுள் ஒன்று
குந்தலவராளி - ஓர் இராகம்
குந்தளம்-மகளிர் தலைமயிர், மயிற்குழற்சி, குழற்கொத்து, சளுக்கரது நாடு
குந்தனம் - இரத்தினம் பதிக்குமிடம், தங்கம்
குந்தன் - திருமால், தூயதன்மையுடையவன்
குந்தா - கப்பலின் பின்புறம்
குந்தாணி - பேருரல், உரலின் வாய்க்கூடு
குந்தாலி-குத்தித் தோண்டும் கருவி, கணிச்சி
குந்தி - கள், பாண்டுவின் மனைவியருள் மூத்தவள்
குந்து - உட்காருகை, திண்ணை ஒட்டு, நொண்டுகை, பழத்தின் பீப்பு
குந்துதல் - உட்காருதல், முன்னங்கால் ஊன்றி நடத்தல், நொண்டி நடத்தல், உன்னுதல், தவறுதல்
குந்துருக்கம்- பறங்கிச்சாம்பிராணி, வெள்ளைக் குங்குலியம்
குபதன் - தீநெறிபிற செல்வோன்
குபிதன் - கோபங்கொண்டவன்
குபீரெனல் - வேகமாதற்குறிப்பு
குபேரசம்பத்து - குபேரனுக்கு உரியதுபோன்ற பெருஞ் செல்வம்
குபேரன் - செல்வத்துக்குத் தலைவன், பணக்காரன், சந்திரன்
குப்பம் - செம்படவர் முதலியோர் வாழும் சிற்றூர், கூட்டம்
குப்பல் - குவியல், மேடு, கூட்டம்
குப்பாசம்-சட்டை, பாம்புச் சட்டை
குப்பாயம் - சட்டை
குப்பி-ஒருவகைக் குடுவை, சடைக்குச்சு, சிமிழ், வயிரவகை
குப்புறுதல் - கடத்தல், தலைகவிழ விழுதல்
குப்பை - குவியல், கூட்டம், செத்தை, மேடு, சதகுப்பை
குப்பைகிளைத்தல் - குப்பையைக் கிண்டுதல்
குப்பைகூளம் - செத்தை முதலியன
குப்பைக்கீரை - அறைக்கீரை
குப்பைமேனி - ஒருவகைப் பூடு
குமடெறிவான் - கருப்பூரவகை
குமட்டு - வாந்தி
குமட்டூர் கண்ணனார் - பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்தினை இயற்றிய புலவர்
குமணன் - ஒரு பெருவள்ளல்
குமண்டை - மகிழ்ச்சிக் கூத்து, செருக்கு மேலிட்டுச் செய்யும் செயல்

குமதி - அறிவுகேடன்
குமரகச்சாணம் - பழைய வரிவகை
குமரகண்டம் } ஒருவகை வலிப்பு
குமரகண்டன் }
குமரகுருபரர் - பதினேழாம் நூற்றாண்டில் விளங்கிய ஓர் புலவர்
குமரகோட்டம் - கச்சியிலுள்ள முருகக்கடவுள் கோயில்
குமரதண்டம் - முருகக்கடவுளைச் சேனாதிபதியாகக் கொண்ட தேவர் படை
குமரம் - கொடுமையில் வந்த விலக்கு, பூர்வத்திலிருந்ததாகச் சிலர் கருதும் தமிழ் இலக்கண நூல்
குமரவேள் - முருகக்கடவுள்
குமரன் - இளைஞன், புதல்வன், முருகன், வைரவன்
குமரி - கன்னி, பருவமடைந்த பெண், புதல்வி, துர்க்கை, குமரியாறு, குமரிமுனை, கன்னியாகுமரி தீர்த்தம், அழிவின்மை, கற்றாழை
குமரிக்கோடு - குமரிக் கடற்பக்கத்திருந்த ஒரு மலை
குமரிகண்டம் - பாரத வருடத்தின் ஒரு பகுதியாகிய பூபாகம்
குமரிச்சேர்ப்பன் - குமரித் துறைக்குரிய பாண்டியன்
குமரிஞாழல் - சங்கபுட்பி, மலவிரேசி
குமரித்துறை - கன்னியாகுமரி தீர்த்தத் துறை
குமரித் தெய்வம் - கன்னியாகுமரித் தேவதை
குமரிப் படை - அழியாச் சேனை
குமரிப்போர் - கன்னிப்போர்
குமரி மதில் - அழியாக் கோட்டை
குமரி மூத்தல் - கன்னியாக இருந்து மூப்படைதல், பயனின்றிக் கழிதல்
குமரியாடுதல் - கன்னியாகுமரியில் தீர்த்தமாடுதல், கன்னியோடு சேர்தல்
குமரியாறு - தமிழ்நாட்டின் தெற்கெல்லையாயிருந்து கடல் கொண்ட ஆறு
குமரியிருத்தல் - வீணே கழிதல்
குமரி வாழை - ஈனாத வாழை
குமரேசசதகம் - குருபாததாசர் இயற்றிய ஒரு சதக நூல்
குமல் - அரிவாள்
குமாரசுவாமி - முருகக்கடவுள்
குமாரசுவாமீயம் - நல்லூர்க் குமாரசுவாமி தேசிகர் செய்த ஒரு சோதிட நூல்
குமாரத்தி - மகள்
குமாரதந்திரம் - முருக வழிபாட்டு நெறியைத் தெரிவிக்கும் ஆகமம்
குமாரதெய்வம் - முருகக்கடவுள்
குமாரன் - புதல்வன், இளைஞன், முருகக்கடவுள்
குமாரி - காளி, அழியா இளமையினள், புதல்வி
குமிகை - முதிராத எள்ளு, வெள்ளெள்ளு
குமிண்சிரிப்பு - புன்சிரிப்பு
குமிண்டி - கீரைவகை
குமிலம் - பேரொலி
குமிழி - நீர் முதலியவற்றில் எழும் குமிழி, குமிழ்
குமிழ் - நீர்க்குமிழி, உருண்டு திரண்ட வடிவம், குமிழமரம்
குமிழ்குமிழ்த்தல் - பிறாக்குத் தோன்றாமல் மறைத்தல்
குமிழ்த்தல் - குமிழியிடுதல், மயிர் சிலிர்த்தல், ஒலிக்கச்செய்தல், கொழித்தல்
குமிழ்ப்பு - குமிழி எழுகை, மயிர் சிலிர்ப்பு, கொழிக்கை
குமிறுதல் - ஒலித்தல்

**குமின்குமினெனல்** - சிலம்பு முதலிய அணிகளின் ஒலிக்குறிப்பு

**குமுகுமுத்தல்** - மணம் வீசுதல்

**குமுகுமெனல்** - பேரொலிக் குறிப்பு, மணம் வீசுதற் குறிப்பு

**குமுக்கு** - மோதகம், கூட்டம்

**குமுங்குதல்** - நசிதல்

**குமுதநாதன்** - குமுதம் மலாவதற்குரிய சந்திரன்

**குமுதப்படை** - காப்பக் கிருகத்து வெளிப்புற மதிலில் வேலைப்பாடமைந்த அடிப் பகுதி

**குமுதப்பிரியா** - ஓர் இராகம்

**குமுதம்**-ஆம்பல், தென்மேற்றிசை யானை, பாஷாணவகை, 9 யானை, 9 தேர், 27 குதிரை, 45 காலாள்கொண்டபடை,கட்டிடத்தின் எழுதகவகை, அடுப்பு, பேரொலி, தருப்பை

**குமுறல்** - பேரொலி

**குமுறுதல்** - அதிரொலி செய்தல், மனத்துள் வருந்துதல், பீறிடுதல், கொதித்தல்

**குமேரு** - பேய் பிசாசுகளுக்கு இருப்பிடமான தென்துருவம்

**குமை** - அழிவு, துன்பம், அடி

**குமைதல்** - குழைய வேகுதல், சேர்தல், வருந்துதல்

**குமைத்தல்** - துவைத்தல், குழைய வேகச் செய்தல், வருந்துதல், அழித்தல்

**கும்பகம்** - வாயுவை உள்ளே அடக்குதல்

**கும்பகருணன்** - இராவணன் தம்பியருள் ஒருவன்

**கும்பகலசம்** - தானியக் குவியல் மீது வைக்கும் மந்திர கலசம்

**கும்பகாரன்** - குயவன்

**கும்பகோணம்** - குடந்தை

**கும்பசன்** - அகத்தியன்

**கும்பசம்பவன்**-அகத்தியன், துரோணன்

**கும்பம்**-குடம், யானைமத்தகம், கும்பராசி,மாசிமாதம்,நூறுகோடி

**கும்பமுனி** } அகத்தியர்
**கும்பயோனி** }

**கும்பல்** - குவியல், கூட்டம்

**கும்பளம்** - கலியாணப் பூசனி

**கும்பன்**- சிவகணத் தலைவருள் ஒருவன், அகத்தியர்

**கும்பா** - உண்கலம்

**கும்பாபிடேகம்** - கோயில்களில் பிரதிட்டை செய்வதற்கும் சுத்தி செய்வதற்கும் உரிய சடங்கு

**கும்பாலத்தி** - சுவாமிக்கு முன் எடுக்கும் கும்பதீபம்

**கும்பி** -சேறு, சுடுசாம்பல், வயிறு, யானை, நரகம், குவியல்

**கும்பிகை** - வாத்திய வகை

**கும்பிடு** - வணக்கம்

**கும்பிடுபூச்சி**-ஒருவகை இலைப்பூச்சி

**கும்பித்தல்** - மூச்சடக்குதல்

**கும்பிநசம்** - பாம்பு

**கும்பிபாகம்** - நரகம்

**கும்பு** -திரள், கூட்டம்

**கும்மட்டம்** - ஒருவகைச் சிறு பறை

**கும்மட்டி** - குதிக்கை, தீச்சட்டி, கொம்மட்டி

**கும்மலித்தல்** - விளையாடுதல்

**கும்மாயம்** - குழையச் சமைத்த பருப்பு

**கும்மாளம்** -குதித்து விளையாடுதல்

**கும்மி** - மகளிர் கைகொட்டிப் பாடி ஆடுங் கூத்து

**கும்முதல்** - அமுக்கிக் குற்றுதல்

**குயக்கலம்** - ஒரு நூல்

**குயத்தி** - குசத்தி

**குயமயக்கு** - தாறுமாறு

**குயம்** - அரிவாள், நாவிதன் கத்தி இளமை, முலை, தருப்பை

**குயலன்** - தேர்ந்தவன்

குரு - கொப்புளங்காணுமம்மைகுரி முதலிய நோய், பார், வேர்க்குரு, புளகம், ஒளி, ஞானாசிரியன், உபாத்தியாயன், பரோகிதன், தகப்பன், அரசன், வியாழன், பூசநாள், கனம், பெருமை, குருவந்தகுலவன், குருவருடம்
குருகு - விலங்கு முதலியவற்றின் இளமை, குட்டி, குருத்து, வெள்ளை, பறவை, கோழி, அன்றில், கொல்லனுலைமூக்கு, கைவளை, இடைச்சங்க நூல்களுள் ஒன்று
குருகுபெயர்க்குன்றம் - பறவைப் பெயருடைய கிரௌஞ்சமலை
குருகுமணி - வெண்மணல்
குருகுலம் - குருவின் வமிசம், குருவின் வாழுமிடம்
குருகூர் - ஆழ்வார் திருநகரி
குருகூர்நம்பி - சடகோபர்
குருக்கண் - மூலை
குருக்கத்தி - மாதவிக்கொடி
குருக்கள் - ஆசாரியர், கௌரவர், கோயிற் பூசை செய்வோர்
குருசந்திரோதயம் - வியாழனும் சந்திரனும் ஓரிராசியில் கூடுவது
குருசம்பாவனை - ஆசிரியனுக்குச் செய்யும் மரியாதை
குருசாமி - குரு சிரேட்டன்
குருசில் - குரிசில்
குருசு - சிலுவை
குருசேத்திரம்-பாரதப் போர் நடந்த பூமி
குருடன் - கண்ணில்லாதவன், ஒரு கண் இழந்த சுக்கிரன்
குருடு - பார்வையின்மை, ஒளியின்மை
குருட்டாட்டம் - கண் மூடித்தனமான செய்கை
குருட்டுக்கொக்கு— நொள்ளை மடையான் கொக்கு
குருட்டுநாள்-செவ்வாயும் சனியும்
குருதி - இரத்தம், செவ்வாய்
குருதிக்காந்தன் - செந்காந்தம்
குருதிப்பலி - வீரன் தன் இரத்தத்தைக் கொற்றவைக்களிக்கும் இரத்தப்பலி
குருதிப்புனல் - இரத்த நீர்
குருதிவாரம் - செவ்வாய்க்கிழமை
குருத்து - மர முதலியவற்றின் குருத்து, வெண்மை, இளமை
குருத்துவம் - ஆசாரியத் தன்மை, பெருமை, கனம்
குருநகை - புன்சிரிப்பு
குருநமச்சிவாயர் - அண்ணாமலை வெண்பாச் செய்த ஞானி (16-ஆம் நூற்றாண்டு)
குருநாடி - நாடிகொண்டு நோயியல்பு அறியும் வகையை உணர்த்தும் ஒரு வைத்திய நூல், ஞானகுருவின் அருளால் இயற்றப் பெற்றதாகக் கூறும் ஆருட நூல்
குருநாடு - குருவமிசத்தார் ஆண்ட நாடு
குருநாதன் - பரமகுரு, முருகக்கடவுள்
குருநாள் - வியாழக்கிழமை
குருநிலம் - குருவமிசத்தார் நாடு
குருநோய்-வைசூரி முதலிய கொப்புளம் காணும் நோய்
குருந்தம் - குருந்து
குருந்து -காட்டெலுமிச்சை, குருக்கத்தி
குருபரன் - குருக்களுள் சிறந்தவன்
குருபாததாசர்-குமரேசசதகம் இயற்றிய ஆசிரியர்
குருபூசை - சமாதியடைந்த குருவின் ஆண்டு நட்சத்திரங்களதோறும் செய்யும் ஆராதனை
குருப்பிரசாதம் - குருவின் அருள்
குருமகன் - குரு, குருவின் புத்திரன்

குருமணி - குரு புதல்வன்
குருமித்தல் - பேரொலி செய்தல்
குருமுடித்தல் - இரச வாதத்தில் [illegible] மருந்து செய்தல்
குருமை - [illegible] பெருமை
குரும்பி - புற்றுச் சோறு
குரும்பை - தென்னங்காய், இளநீர்
குருலிங்கசங்கமம் - குருவும் சிவமும் [illegible]
குருவர் - [illegible]
குருநடர் - [illegible] குடங்களை [illegible]
குருவம் - [illegible]
குருவாரம் - வியாழக்கிழமை
குருவி - பறவை, [illegible]
குருவிக்காரன் - குருவிகளைப் பிடிக்கும் சாதியான்
குருவிச்சை - புல்லுருவி
குருவித்தலை - வில்லாளிகள் எய்து பழகுதற்குரிய குறியில் ஒன்று [illegible]
குருவிந்தம் - தாழ்ந்தரமாணிக்கம், [illegible], சாதிலிங்கம்
குருவுக்காதி - பச்சைக் கற்பூரம்
குருளுதல் - சுருளுதல்
குருளை - [illegible] விலங்கின் இளமை, பாம்பின் குஞ்சு, ஆமை
குருள் - [illegible] தலைமயிர்
குரூஉப்புகை - மணமுள்ளபுகை
குரூபி - [illegible]
குரூரம் - கொடுமை
குரை - ஒலி, இசைநிறை, குதிரை
குரைத்தல் - ஆரவாரித்தல்
குரைப்பு - ஓசை
குரைமுகன் - நாய்
குரோசம் - $2\frac{1}{4}$ மைல் கொண்ட தூரம்
குரோடம் பன்றி
குரோட்டம் - நரி
குரோதம் - கோபம்
குரோதன - ஐம்பத்தொன்பதாவது ஆண்டு
குரோதன் - வீரபத்திரன்
குரோதி - முப்பத்தெட்டாமாண்டு
குலக்காலன் - யமன் போலக் குலத்தை நாசஞ் செய்பவன்
குலகிரி - அட்டகுல மலை
குலசிரேட்டன் - குடியிற் பிறந்தவ[illegible] மிக்கவன்
குலசேகரப்பெருமாள் - பன்னிரு ஆழ்வாருள் ஒருவர்
குலச்சிறைநயனார் - அறுபத்துமூன்று நாயன்மாருள் ஒருவர் (சம[illegible]சுவாமி காலத்தவர்)
குலஞ்செப்புதல் - தன் குலப்பெருமை கூறுதல்
குலஞ்செய்தல் - குலத்தைநாட்டுதல்
குலதருமம் - குலத்துக்கு உரிய ஒழுக்கம்
குலதிலகன் - குலத்திற் சிறந்து விளங்[illegible]
குலதெய்வம் - ஒரு குலத்தார் பரம்பரையாக வழிபடும் தேவதை
குலபருவதம் - சமபுத்தீவின் முக்கிய மலைத் தொடர்கள்
குலப்பகை - பரம்பரையாயுள்ள சாதி விரோதம்
குலப்பரத்தை - ஒருவனுக்கே உரிமை பூண்டொழுகும் பரத்தையர் குலத்தவள்
குலப்பன் - [illegible]
குலப்பெயர் - குலம்பற்றி விளங்கும் பெயர்
குலமகள் - நற்குடியிற் பிறந்தவள்
குலமகன் - நற்குடியிற் பிறந்தவன்
குலமீன் - அருந்ததி
குலமுதல் - வமிசத்தின் மூல புருடன், மகன், குலதெய்வம்
குலமுதற்பாலை - பண்வகை
குலமுன்னோன் - நற்குடிப் பிறந்தவன்

**குலமுறை** - வமிச வரலாறு
**குலம்** - கூட்டம், உயர்குலம், சாதி, மரபு, கோத்திரம், கூட்டம், வீடு, கோயில், குடும்பம், ...
**குலவரை** - உயர்ந்த மலை
**குலவன்** - உடையவன் ...
**குலவிச்சை** - குலவித்தை
**குலவித்தை** - குலத்திற்குப் பரம்பரையாக வரும் வித்தை
**குலவிளக்கு** - குலத்தை விளங்கச் செய்பவர்
**குலவு** - வளைவு
**குலவுதல்** - விளங்குதல், மகிழ்தல், உலாவுதல், நெருங்கி உறவாடுதல், தங்குதல், வளைதல், குவிதல்
**குலவேளை** - நலவேளை
**குலா** - மகிழ்ச்சி
**குலாதினி** - கடுகுரோகிணி
**குலாமர்** - உலோபிகள்
**குலாயம்** - பறவைக் கூடு
**குலாலன்** - குயவன்
**குலாவுதல்** - உலாவுதல், கட்டாடுதல், விளங்குதல், மகிழ்தல், நிலைபெறுதல், கொண்டாடுதல், வளைதல், வசப்படுத்துதல்
**குலிகம்** - சாதிலிங்கம்
**குலிங்கம்** - ஒரு தேசம், ஊர்க்குருவி
**குலிசபாணி** - இந்திரன்
**குலிசம்** - வச்சிராயுதம், வயிரம்
**குலிசவேறு** - வச்சிராயுதம்
**குலிசி** - குலிசப்படை உடைய இந்திரன்
**குலிலி** - வீராவேசவொலி
**குலீனன்** - உயர்குலத்தோன்
**குலுக்கு** - அசைப்பு, மினுக்கு
**குலுங்குதல்** - அசைதல், நடுங்குதல்
**குலுத்தம்** - கொள்ளு
**குலை** - கொத்து, ஈரற்குலை முதலியன, செய்கரை, பாலம், வில்லின் நாண், நாணி
**குலைதல்** - அவிழ்தல், கலைதல், நிலை கெடுதல், நடுங்குதல், அழிதல்
**குலைப்பு** - நடுக்குவாதம்
**குலைவட்டம்** - அம்பகம் ...
**குலைவியாதி** - ஈரல்வியாதி
**குலோத்துங்க சோழனுலா** - 2-ஆம் குலோத்துங்க சோழன்மீது ஒட்டக்கூத்தர் பாடிய உலா (12-ஆம் நூற்றாண்டு)
**குல்மம்** - 45 காலாட்களும், 27 குதிரைகளும், 9 தேர்களும், 9 யானைகளும் அடங்கிய படைப்பிரிவு
**குல்லகம்** - வறுமை
**குல்லம்** - மூடம்
**குல்லா** - வெளி, தலைக்குல்லா, பாய்மரத்தைக் கட்டும் கயிறு
**குல்லை** - துளசி, வெட்சி, கஞ்சா
**குவடு** - திரட்சி, மலை, குன்று, மலையுச்சி, மரக்கப்பு
**குவரிகுண்டலம்** - வாலுளுவை
**குவலயம்** - பூமி, நெய்தல், கருங்குவளை
**குவலயாபீடம்** - கஞ்சன் கண்ணனைக் கொல்ல ஏவிய யானை
**குவலி** - இலந்தை
**குவலிடம்** - ஊர்
**குவவு** - திரட்சி, குவியல், கூட்டம், ஒன்றோடொன்று பிணைகை, பெருமை, பூமி
**குவவுதல்** - குவித்தல், குவிதல்
**குவளை** - கருங்குவளை, செங்கழுநீர், ஓர் பேரெண், கண்குழி
**குவளைக்கடுக்கன்** - மணியழுத்தின கடுக்கன்
**குவளைத்தாரன்** - குவளை மாலை அணிந்த தருமன்

**குழியம்** - திரள்வடிவு, வாசனையுண்டை
**குழிவு** - குழிந்திருக்கை, மாணிக்கக் குற்றங்களுள் ஒன்று
**குழு** - மக்கட்கூட்டம், தொகுதி
**குழுமல்** - கூடுகை, கூட்டம்
**குழுமுதல்** - கூடுதல், கலத்தல், கூடி முழங்குதல்
**குழும்பு** - குழி, திரள்
**குழுவல்** } கூடுகை, கூட்டம்
**குழுவுதல்** }
**குழூஉ** - கூட்டம்
**குழூஉக்குறி** - சிற்சில கூட்டத்தாருள் வழங்கும் சங்கேத மொழி
**குழூஉநிலை** - கோபுரமுதலிய கட்டடத்தின் தள நிலை
**குழூஉப்பெயர்** - கூட்டம் பற்றி வரும் பெயர்ச்சொல்
**குழை** - தளிர், சேறு, துளை, உழலை, காது, குண்டலம், ஆகாசம்
**குழைகுழைத்தல்** - குழைமயிர்க்கிடுதல்
**குழைச்சரக்கு** - சாரமற்ற பண்டம், காக்கப்படும் பொருள்
**குழைச்சு** - உடம்பிலுள்ள எலும்பின் சந்து
**குழைதல்** - இளகுதல், வருந்துதல், வாடுதல்
**குழைமுகப்புரிசை** - அந்தப்புரம்
**குழைவு**-நெகிழ்ச்சி, இரக்கம், வாடுகை
**குளகம்** - மரக்கால், பல பாட்டுக்கள் ஒருவினை கொள்ளும் அமைதி, குற்றெழுத்துத் தொடர்ந்த செய்யுள்
**குளகன்** - வாலிபன்
**குளகு** - தழையுணவு, தழை
**குளப்படி** - குளம்புபடிந்த சுவடு
**குளப்புக் கூறுகொள்ளுதல்** - பெருந்துன்பமுறுதல்

**குளம்** - தடாகம், ஏரி, மாகாழி, நெற்றி, வெல்லம்
**குளம்பு** - விலங்குகளின் பாதம்
**குளவடை** - பழைய ஏரி வரி
**குளவட்டை** - நீரட்டை
**குளவரகு** - வரகுவகை
**குளவி** - கொட்டும் ஈவகை, வண்டுவகை, காட்டுமல்லிகை
**குளறுதல்** - பயத்தால் மொழி தடுமாறுதல், நரி முதலியன ஊளையிடுதல்
**குளறுபடை** - குழறுபடை
**குளாம்பல்** - குளத்திலுண்டாகும் ஆம்பல்
**குளி** - நீராட்டு, முத்துக்குளி
**குளிகை** - மாத்திரை
**குளிக்காலம்** - ஒவ்வொரு தினத்திலும் சூரியனுதயத்திலிருந்து $3\frac{3}{4}$ நாழிகைவரையுள்ளகாலம்
**குளிகன்** - நாளுக்கோளுள் ஒன்று
**குளிகாரன்**-சங்கு முத்து முதலியன மூழ்கி எடுப்போன்
**குளிசம்** - இரட்டையாகக் கட்டிக் கொள்வது
**குளித்துறை** - நீராடுந்துறை
**குளித்தல்** - நீராடுதல், தைத்தல், அழுந்துதல், மறைதல், மூழ்கி எடுத்தல்
**குளியம்** - வேங்கைப்புலி
**குளிரநோக்குதல்**-அருளோடு பார்த்தல்
**குளிரம்** - நண்டு
**குளிரி** - பீலிக்குஞ்சம்
**குளிர்** - குளிர்ச்சி, நடுக்கம், வெண்குடை, மீனொழுங்கு, தங்குகை, குடமுழவு, கிளிகடி கருவி, கவண், மழு, சூலம், அரிவாள், இலைமூக்கரிகத்தி, நண்டு, கர்க்கடகராசி, ஆடிமாதம்
**குளிர்ச்சி**-சீதளம், இனிமையானது
**குளிர்ந்துகொல்லி** - வஞ்சகன்

**குளிர்மை** - குளிர்ச்சி
**குளிறு** - ஒலி
**குளுந்தை** - களைதூர்வகை
**குளுவன்** - குறவனுடைய [illegible]
**குளுவை** - பறவை
**குள்ளங்குடைதல்** - நீருள் மூழ்க [illegible] அழுந்தல்
**குள்ளக்குளிர்தல்** - மிகக் குளிர்தல்
**குள்ளநரி** - நரிவகை
**குள்ளம்** - குறுமை, தந்திரம்
**குறங்கறுத்தல்** - காலை [illegible]
**குறங்கு** - தொடை, கிளைவாய்க்கால்
**குறங்குசெறி** - தொடையாபரணம்
**குறடா** - குதிரைச்சவுக்கு
**குறடு** - கட்டியக்காரன், [illegible] குறடு, மரத்துண்டு, இறைச்சி கொத்தும் பட்டடை, தோல்முதலியவற்றின் அச்சுக் கொக்கும் இடம், பாதக்குறடு, திண்ணை ஒட்டு, திண்ணை, சுவர் முதலியவற்றின் மேல் எழுதகம், பறைவகை
**குறட்டாழிசை** - குறள்வெண்பாவிற் சிதைந்து வருவதாகிய பாவினம்
**குறட்டை** - நித்திரையில் மூச்சு விடும் ஒலி
**குறட்பா** - குறள்வெண்பா
**குறண்டி** - செவ்வழிப் பண்வகை, முட்செடி, தூண்டில்முள்
**குறண்டுதல்** - வளைதல், வலிப்புக் கொள்ளுதல்
**குறத்தி** - குறிஞ்சிநிலப்பெண்
**குறத்திப்பாட்டு** - குறவஞ்சிநாடகம்
**குறமகளிளவெயினி** - சங்காலப் பெண்பாற் புலவருளொருவர்
**குறம்** - குறத்தி சொல்லுங் குறி, குறத்திப்பாட்டு
**குறவஞ்சி** - குறத்தி, குறத்திப்பாட்டு
**குறவன்** - குறிஞ்சி நிலத்தவன், பாலைநிலத்தவன்.
**குறவாணர்** - மலைக்குறவர்
**குறவி** - குறச்சாதிப்பெண்
**குறவை** - [illegible]
**குறழ்தல்** - குனிதல்
**குறளடி** - இரண்டு சீர்கொண்ட அடி
**குறளன்** - குள்ளன், வாமனன்
**குறளி** - குறியவள், குறளிப் பிசாசு, குறளிவித்தை, குறுகியவன்
**குறளிவித்தை** - குறளியின் உதவியால் செய்யும் மாயவித்தை
**குறளை** - கோட்சொல், [illegible]
**குறள்** - குறுமை, ஈரடி உயரமுள்ள குள்ளன், பூதம், சிறுமை, குறளடி, திருக்குறள்
**குறாவுதல்** - வாடுதல்
**குறி** - அடையாளம், இலக்கு, குறிப்பிடம், நோக்கம், நிமித்தம், சபை, இலக்கணம், கோடு
**குறிகூடுதல்** - நோக்கம்நிறைவேறுதல்
**குறிக்கொள்ளுதல்** - கைக்கொள்ளுதல், மனத்துட்கொள்ளுதல், குறியாகப் பற்றுதல்
**குறிக்கோள்** - ஞாபகத்தில் வைக்கை, அறியுமதிறம்
**குறிசொல்லுதல்** - அதிட்டம்முதலியவற்றைக் குறிப்பாகக்கூறுதல்
**குறிச்சி** - குறிஞ்சிநிலத்தூர், ஊர்
**குறிஞ்சா** - கொடிவகை
**குறிஞ்சி** - மலையும் மலைசார்ந்த நிலமும், குறிஞ்சிப்பண், ஓர் இராகம், மரவகை
**குறிஞ்சிக்கிழவன்** - முருகன்
**குறிஞ்சிப்பறை** - தொண்டகப்பறை
**குறிஞ்சிப்பாட்டு** - பத்துப்பாட்டுள் ஒன்று (கபிலர் பாடியது)
**குறிஞ்சிலி** - காதில் அணிதற்குரிய பூவகை
**குறித்தல்** - கருதுதல், தியானித்தல், வரையறுத்தல், சுட்டுதல்,

**சக்கிரபாணி**-துர்க்கை, சக்கரபாணி
**சக்கிரம்** - சக்கரம்
**சக்கிரன்** - இந்திரன்
**சக்கிராங்கி** - கடுரோகிணி
**சக்கிரி** - குயவன், செக்கான், பாம்பு
**சக்கிலியன்** - செம்மான்
**சக்கு** - கண், நுஞ்சாளம்
**சக்கை** , கோது
**சக்தி** - சத்தி
**சங்கச் செய்யுள்** - சங்க காலத்துப் பாடல்
**சங்கடம்** - வேதனை
**சங்கட்டம்** - சங்கடம்
**சங்கணி துறை** - ஆழ்வார் திரு நகரியில் தாமிரபருணியின் தென் கரை
**சங்கதம்** - வடமொழி
**சங்கதி** - காரியம்
**சங்கத்தமிழ்** - சங்காலத்துத் தமிழ் நூல், சங்க காலத்து உயர்ந்த தமிழ்
**சங்கத்தார்** - சபையார், சங்கப் புலவர்
**சங்கநிதி** - குபேரனது நவநிதிகளுள் ஒன்று
**சங்கபாலன்** - அட்டநாகத்தொன்று
**சங்கமம்** - கூடுகை, சிவனடியார் திருக்கூட்டம், இயங்குதிணைப் பொருள் அசைந்து வேறு இடம் சேரும் பொருள்
**சங்கமருவுதல்** - தமிழ்ச் சங்கத்தார் அங்கீகாரம் பெறுதல்
**சங்கமர்** - வீரசைவருளொருசாரார்
**சங்கமிருத்தல்** - சங்கத்தின் அங்கத்தனராயிருத்தல்
**சங்கமுகம்** - ஆறு கடலுடன் கூடுமிடம்
**சங்கமுத்திரை** - வலக்கைப் பெருவிரல் நுனி சுட்டு விரலினடியைத் தொடும் முத்திரை
**சங்கம்** - கூட்டம், சபை, புலவர், முச்சங்கம், சந்து, கைவளை, இலட்சங்கோடி, 2187 தேர், 2187 யானை, 6561 குதிரை, 10,935 காலாளடங்கிய சேனை, கணைக்கால், அழகு
**சங்கயம்** - சந்தேகம்
**சங்கரசாதி** - கலப்புச்சாதி
**சங்கர நமச்சிவாயர்** - நன்னூல விருத்தியுரை செய்த புலவர் (18ஆம் நூற்றாண்டு)
**சங்கர நாராயணன்** - அரி அர வடிவான சிவமூர்த்தம்
**சங்கரம்** - போர், நஞ்சு, சாதிக்கலப்பு
**சங்கரன்** - சிவன், கலப்புச் சாதியிற் பிறந்தவன்
**சங்கராசாரியார்** - மாயாவாதம் என்னும் வேதாந்தக் கருத்து நூல்களியற்றிய ஓர் ஆசிரியர்
**சங்கராபரணம்** - ஓர் இராகம்
**சங்கரி** - பார்வதி
**சங்கரித்தல்** - அழித்தல்
**சங்கருடணன்** - திருமாலின் அழித்தல் மூர்த்தங்களுள் ஒன்று
**சங்கரேகை** - சங்கின் வடிவாகக் கையிலமைந்திருக்கும் இரேகை
**சங்கலர்** - பகைவர்
**சங்கலீகரணம்** - சாதிக் கலப்பினை யுண்டாக்குதலாகிய பாவம்
**சங்கலிதம்** - கலப்பு, எண் கூட்டல்
**சங்கலேகை** - சங்கரேகை
**சங்கவளை** - சங்குக் காப்பு
**சங்கற்பநிராகரணம்** - மெய்கண்ட சாத்திரங்களுள் ஒன்று (உமாபதி சிவாசாரியார் செய்தது)
**சங்கற்பமாசம்** - இரண்டு அமாவாசைகளைக் கொண்டமாதம், சாந்திரமான மாதம்
**சங்கற்பம்** - மன உறுதி, கருத்து, கொள்கை

**சங்கனனம்** - நரம்பு
**சங்காட்டம்** } சேர்க்கை, இணக்கம்
**சங்காத்தம்** } வாசம்
**சங்காதம்** - கூட்டம்
**சங்காத்தி** - தோழன்
**சங்காபிடேகம்** - சங்கினால் செய்யப்படும் அபிடேகம்
**சங்காரம்** - அழிக்கை
**சங்காரித்தம்** - ஏழு மேகங்களுள் பூவைப் பொழிவது
**சங்கானர்** - கலவியையேநாடுபவர்
**சங்கி** - சம்பந்தமுடையது
**சங்கிதம்** - சந்தேகிக்கப்பட்டது
**சங்கிதை** - தொகுதி, வேதத்தின் ஒரு பகுதி
**சங்கித்தல்** - சந்தேகித்தல், கனப்படுத்துதல்
**சங்கியை** - எண்ணிக்கை
**சங்கிரகம்** - சுருக்கம்
**சங்கிரந்தனன்** - இந்திரன்
**சங்கிரமணம்**, கிரகம் ஓர் இராசியிலிருந்து அடுத்த இராசிக்குச் செல்லுகை
**சங்கிரமம்** - சென்று பற்றுகை, சங்கிரமணம்
**சங்கிரமித்தல்** - இராசி மாறுதல்
**சங்கிரம்** - காடு
**சங்கிராந்தவாதம்** - மலம் நீங்கிய உயிரில்திருவருள்பிரதிபலித்து அதனை அருள் வடிவாகக்கும் என்று கூறும் சமயம்
**சங்கிராந்தி** - மாதப் பிறப்பு
**சங்கிராமம்** - போர்
**சங்கிலி** - தொடர்
**சங்கிலிக்கறுப்பன்** - ஒரு கிராம தேவதை
**சங்கிலியார்** - சுந்தரமூர்த்தி நாயனார் மனைவியருள் ஒருவர்
**சங்கினி** - சங்குச்சாதிப் பெண்
**சங்கீதம்** - இசை
**சங்கீரணம்** - கலப்பு
**சங்கீர்த்தனம்** - புகழுகை
**சங்கு** - நீர்வாழ்சந்து, அணிகலவகை, கோழி, மட்டிப்படைக் கலம், இரத்து
**சங்குதுளித்தல்** - மூழ்கிச் சங்கெடுத்தல்
**சங்குப்பூ** - சங்குச் சுரி
**சங்கேதம்** - குறி,குழூஉக் குறி, ஒரு கூட்டத்தினர் வழங்குஞ் சொல், உடன்படிக்கை, சாதிசமயங்களால் உண்டாகும் ஒற்றுமை யுணர்ச்சி
**சங்கை** - ஐயம், பூதபிசாசம், எண்ணம், எண், கணக்கால், மரியாதை
**சங்கோசபரிவாரம்** - தக்கோரை உபசரித்து அழைப்பதற்கென்று அரசனால் நியமிக்கப்பட்ட சிறு கூட்டத்தார்
**சங்கோசம்** - சுருங்குகை, கூச்சம்
**சசம்** - முயல்
**சசி** - கற்பூரம், இந்துப்பு, கடல், மழை, இந்திராணி, சந்திரன்
**சசிவர்ணபோதம்**-தத்துவராயர் தமிழில் இயற்றியஒருவேதாந்தநூல்
**சச்சந்தன்** - சீவகன் என்ற மன்னன் தந்தை
**சச்சரவு** - கலகம்
**சச்சரி** - வாத்தியவகை
**சச்சரை** - பிளந்த துண்டு
**சச்சற்புடம்** - தாளவகை
**சச்சாரம்** - யானைக்கூட்டம்
**சச்சிதானந்தம்** - உண்மை அறிவு ஆனந்தம்
**சச்சை** - பலமுறை ஓதுகை, ஆராய்ச்சி
**சச்சையன்** - உண்மைப்பொருளானவன்
**சஞ்சத்தகர்** - வீரச்செயல் செய்வதாகச் சபதங் கூறி அதன்படி தவறாது நடக்கும் அரசவீரர்

**சஞ்சயன்** - திருதராட்டிரனுடைய சாரதி
**சஞ்சயனம்** - பால் தெளித்தலாகிய ஈமச் சடங்கு
**சஞ்சரம்** - சஞ்சலம், உடல
**சஞ்சரித்தல்** - நடமாடுதல்
**சஞ்சரீகம்** - வண்டுவகை
**சஞ்சலம்** - நிலையின்மை, துன்பம
**சஞ்சாரம்** - நடமாட்டம்
**சஞ்சிகை** - புத்தகத்தின் அல்லது பத்திரிகையின் பகுதி
**சஞ்சிதம்** - அனுபவித்தது போக எஞ்சிய கன்மம
**சஞ்சீவகரணி** - மூர்ச்சை தீர்த்து உயிர்தருமமருந்து, புளியமரம்
**சஞ்சீவி** } உயிர்ப்பிக்கும் மருந்து, சிந்தில்
**சஞ்சீவினி** }
**சஞ்சுபம்** - அரசர்க்குரியவிருதுகள
**சடகம்** - ஊர்க்குருவி, கரிக்குருவி, வட்டில
**சடகோபதாசர்** - அரிசமய தீபம் என்னும நூலை இயற்றியவர் (17-ஆம் நூற்றாண்டு)
**சடகோபம்** - திருமால் கோயிலகளில் தரிசிப்பவர்களது முடியில் வைத்து அருளுவதற்கும் பிறவுறுக்குமாக அமைக்கப்பட்டுச் சுவாமி முன் வைக்கப்பட்டுள்ள திருவடி பொறிக்கப்பட்ட முடி
**சடகோபரந்தாதி** - கம்பர செய்த ஓர் அந்தாதி நூல்
**சடகோபன்** - நம்மாழ்வார்
**சடக்கு** - செருக்கு, உடல
**சடங்கம்** - சடங்கு
**சடங்கர்** } வேதத்துக்குரிய ஆறங்கங்களையும அறிந்தவன்
**சடங்கன்** }
**சடங்கு** - கிரியை, மற்பிடிவகை
**சடம்** - அறிவில பொருள், உடல், பொய், வஞ்சகம், கொடுமை
**சடம்பு** - சணல
**சடரம்** - வயிறு
**சடலம்** - உடல்
**சடன்** - மூடன்
**சடாக்கரம்** - ஆறு எழுத்துக்களினாகிய முருகமந்திரம்
**சடாடவி** - அடர்ந்த சடை
**சடாதரன்** - சிவன், வீரபத்திரன்
**சடாபாரம்** - சடைக்கற்றை
**சடாயு** } கழுகரசன்
**சடாய்** }
**சடாரி** - கவசம்
**சடாலம்** - ஆலமரம, தேன் கூடு
**சடானனன்** - ஆறு முகமுள்ள முருகன்
**சடிதி** - விரைவு
**சடிலம்** - சடை, குதிரை, வேர், செறிவு
**சடிலை** - சடாமாஞ்சி
**சடுலவோசை** - தீக்கொழுந்தினசைவால எழும ஒலி
**சடை** - பின்னல்விழுந்ததலைமயிர், பின்னிய கூந்தல், வேர், விழுது, வெட்டிவேர், சடாமாஞ்சி, திருவாதிரை, மிதுன ராசி, வேதமோதும் முறைகளுள் ஒன்று
**சடைச்செந்நெல்** - சடைச்சம்பா நெல
**சடைநாகம்** - நாகம போல செய்த பெண்கள் தலையணி
**சடைநாயனர்** - சுந்தரமூர்த்தி நாயனருக்குத் தந்தை (63 நாயன்மாருள் ஒருவர)
**சடையப்பன்** - சிவன்
**சடையன்** - கம்பனை ஆதரித்த வேளாளப் பிரபு
**சட்** - ஆறு
**சட்சு** - கண்
**சட்ட** - செவ்விதாக, முழுதும், விரைவாக

**சட்டகம்** - சட்டம், மக்களது படுக்கை, வடிவு, உடல், சவம், சட்டை
**சட்டம்** - எழுதும் ஓலை, நியாயவூறபாடு, செப்பம், மரச் சட்டம்
**சட்டம்பி**-உபாத்தியாயர், எசமான்
**சட்டன்** - மாணாக்கன்
**சட்டாம்பிள்ளை** - வகுப்பில் தலைமை வகிக்கும் மாணவன்
**சட்டி** - மட்பாண்டம், ஆருத்திதி, அறுபது
**சட்டு** - ஆறு
**சட்டுவம்** - அகப்பை
**சட்டென** - விரைவாக
**சட்டை** - அங்கி, பாம்புச் சட்டை, மதிப்பு
**சட்டைமுனி** - ஒரு சித்தர்
**சணம்** - நொடிப்பொழுது
**சணம்பு** - சணல்
**சண்டகோலாகலம்** - ஒரு நரகம்
**சண்டதரம்** - ஒரு நரகம்
**சண்டப்பிரசண்டம்** - மிகு கடுமை, ஆர்ப்பாட்டம்
**சண்டப்பை** - கருப்பை
**சண்டமாருதம்** - பெருங்காற்று
**சண்டம்** - கொடுமை, கோபம், விரைவு, ஒரு நரகம்
**சண்டவேகம்** - மிகு விரைவு
**சண்டன்** - கடுங்கோபி, யமன், சூரியன, சண்டேசுரர், அலி
**சண்டாளம்** - நீசத தன்மை
**சண்டி** - கொடியவள், துர்க்கை, ஒரு மரம்
**சண்டிகை** - துர்க்கை
**சண்டினம்** - பறவைகளின் கதி விசேடங்களிலொன்று
**சண்டு** - கூளம், பயிரில் விழும் வண்டு வகை
**சண்டை** - சச்சரவு
**சண்ணம்** - ஆண் குறி
**சண்ணித்தல்** - பூசுதல், சார்ந்திருத்தல்
**சண்ணுதல்** - தாக்குதல், நீக்குதல
**சண்பகம்** - ஒருவகைப்பூமரம
**சண்பங்கோரை** } சமபங்கோரை
**சண்பு** }
**சண்பை** - சீகாழி
**சண்முகன்** - ஆறுமுகன்
**சதகம்** - நூறுபாட்டுள்ள பிரபந்த வகை
**சதகுப்பி** } மருநதுப் பூண்டுவகை
**சதகுப்பை** }
**சதகோடி** - நூறுகோடி, வச்சிராயுதம, 100 முனைகளுடையது
**சதக்கிரது** - இந்திரன்
**சதக்கினி** - நூற்றுவரைக்கொல்லி எனனும் மதிற் பொறி
**சதங்கை** - கிண்கிணி
**சதங்கைத்தாமம்** - ஒரு வகைப் பூமாலை
**சதசத்து** - உள்ளதும் இல்லதும், அறிதலும அறியமையும்உள்ள ஆனமா
**சததளம்** - தாமரை
**சதநியுதம்** - கோடி
**சதபத்திரம்** - தாமரை, கிளி, மயில்
**சதபுட்பி** - சதகுப்பை
**சதமகன்** } நூறு யாகம செய்த
**சதன்யு** } இந்திரன்
**சதமூலி** - தண்ணீர் விட்டான
**சதம்** - நிலையானது, இறகு
**சதயம்** - சதய நட்சத்திரம்
**சதனம்** - சதப், வீடு
**சதா** - மரக்கலம், பழுது, எப்பொழுதும்
**சதாகதி** - காற்று
**சதாங்கம்** - இரதம்
**சதாசிவம்** - பஞ்சகர்த்தாக்களில் முதல்வராய் உயிர்களுக்கு அருள் செய்யும் பொருட்டுச் சிவன் மேற்கொள்ளும் மூர்த்தம்

**சதாசிவன்** - அனுக்கிரகஞ்செய்யும் சிவமூர்த்தி
**சதாபுட்பி** } எருக்கு
**சதாபூடம்** }
**சதாவுதல்** - பழுதாதல்
**சதி** - வஞ்சனை, சோறு, தீ உண்டாக்கும் கருவி, தாளவொத்து, கற்புடையவள், உரோகிணி, பார்வதி, இறந்த கணவனோடு மனைவி உடன்கட்டை ஏறுகை, வட்டம்
**சதித்தல்** - அழித்தல்
**சதிபாய்தல்** - நாட்டியமாடுதல்
**சதிரம்** - சதுரம்
**சதிரி** - சாமர்த்தியமுள்ளவர்
**சதிர்** - பெருமை, அழகு, வலிமை, நாட்டியம்
**சதுக்கப்பூதர்** - நாற்சந்தியில் குடிகொண்டுள்ள பூதங்கள்
**சதுக்கம்** - நான்கு சந்து கூடியது, சந்து
**சதுக்கல்** - வழுக்கல்
**சதுட்டயம்** - நான்கன் தொகுதி, கேந்திரம்
**சதுப்பு** - சேறு
**சதுமுகன்** - நான்முகன், பிரமன்
**சதுரக்கள்ளி** - கள்ளிவகை
**சதுரகராதி** - 18-ஆம் நூற்றாண்டில் வீரமாமுனிவர் இயற்றிய அகராதி
**சதுரங்கசேனை** - யானை, தேர், குதிரை, காலாள் கொண்ட சேனை
**சதுரங்கம்**-யானை குதிரை தேர் காலாட்கள் என்னும் காய்கள் வைத்து ஆடும் விளையாட்டு
**சதுரந்தயானம்** - பல்லக்கு
**சதுரம்** - சாமர்த்தியம், அள வொத்த நாற்கோணம்
**சதுரவளவு** - அகலத்தையும் நீளத்தையும் பெருக்கி வந்த அளவு
**சதுரானனன்** - நான்முகன்
**சதுருடியங்கள்** - நால் வகைச் சேனைகள்
**சதுர்** - நான்கு, சாமர்த்தியம், உபாயம்
**சதுர்த்தசி** - பதினான்காம் திதி
**சதுர்த்தம்** - நான்காவது
**சதுர்த்தி** - நான்காம் திதி
**சதுர்திசை** - காற்பலம்
**சதுர்த்தியறை**-திருமணத்தில் நான்காம் நாளிரவு மணமகனும் மணமகளும் கூடியுறையும் அறை
**சதுர்யுகம்** - கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகமென்ற நான்கு யுகங்கள்
**சதுர்வேதம்**-இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்ற நான்கு வேதங்கள்
**சதேகமுத்தி** - சீவன் முத்தி
**சதை** - மாமிசம்
**சதைத்தல்** - நெரித்தல்
**சதையம்** - சதய நட்சத்திரம்
**சதோடம்** - குற்றத்துடன் கூடியது
**சத்தக்கருவி** - தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி என்ற ஐவகைப்பட்ட இசைக்கருவி
**சத்ததாது**-உடம்பிலமைப்பிலுள்ள இரதத்ம், உதிரம், எலும்பு, தோல், இறைச்சி மூளை, சுக்கிலம் என்ற ஏழுவகைப் பொருள்கள்
**சத்தமாதர்** - ஏழுமாதர்
**சத்தமி** - ஏழாந் திதி
**சத்தமேகம்** - சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவார்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீல வருணம் என்னும் ஏழு மேகங்கள்

**சத்தம்** - சொல், ஒலி, எழுத்துச் சொற்களைப்பற்றிய இலக்கண நூல, ஏழு

**சத்தலோகம்** - பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம், தரா என்னும் ஏழு உலோகங்கள்

**சத்தவருக்கம்**-நெல்லி,வெட்டிவேர், இலாமிச்சைவேர்,சடாமாஞ்சி, இலவங்கம், ஏலம், திராட்சை என்னும் ஏழுவகை மருந்துப் பொருள்கள்

**சத்தவிடங்கத்தலம்** - ஆரூர், நாகை, நள்ளாறு, மறைக்காடு, காரு டல், வாய்மூர், கோளிலி என்ற ஏழு சிவதலங்கள்

**சத்தவிருடிகள்** - அகத்தியன் புலத்தியன், அங்கிரசு, கௌதமன், வசிட்டன், காசிபன், மார்க்கண்டன்

**சத்தவிருடிமண்டலம்** - சத்த இருடிகளாகிய ஏழு நட்சத்திரங்கள் தோன்றும் வானிடம்

**சத்தன்** - ஆற்றலுடையவன்

**சத்தார்** - சாய்வு

**சத்தி** - ஆற்றல், மூன்று, பெருங்கொடி, சிவனது அருள், உமை, வேல, சூலம், நுடை, வாந்தி

**சத்திக்குடம்** - மாளகைமேல் வைக்கப்படும் சூலம் நாட்டிய குடம்

**சத்தித்தல்** - ஒலித்தல், வாந்திசெய்தல்

**சத்திநாயனார்** - 63 நாயன்மாருள் ஒருவர்

**சத்திநிபாதம்** - பக்குவமுடைய ஆன்மாவிலே திருவருள் பதிகை

**சத்திமுகம்** - அரசனது ஆணைப் பத்திரம்

**சத்தியபாமை** - கண்ணன் தேவியருளொருத்தி

**சத்தியம்** - உண்மை, பிரமாணம்,

**சத்தியயுகம்** - கிருதயுகம

**சத்தியலோகம்** - பிரமன் வசிக்கும உலகம்

**சத்தியவான்** - சாவித்திரியின் கணவன், உண்மை பேசுவோன்

**சத்தியோசாதம்** - சிவன் ஐம்முகங்களுள் மேற்கு நோக்கியது, ஒரு சைவ மந்திரம

**சத்தியோநிர்வாணதீட்சை** - மாணக்கனை உடனே வீடுபேறு சேர்க்கும நிர்வாண தீட்சை

**சத்திரபதி** - அரசன்

**சத்திரம்**-அன்னசாலை, பாகவகை, கைவிடாப் படை, வேல, இரும்பு, குடை, அதிசயம

**சத்திரியன்** - அரச வகுப்பினன்

**சத்து** - உண்மை, நன்மை, வலி, அறிவு

**சத்துரு** - பகைவன்

**சத்துருக்கன்** - இராமன் தம்பி, மார்பில நான்கு சுழிகளுள்ள குதிரை

**சத்துருத்தானம்** - இலக்கினத்துக்கு ஆறும வீடு

**சத்துருதுரந்தரன்**-பகைவரை வெல்பவன்

**சத்துவகுணம்** - நற்காரியங்களிலே நோக்கம உண்டாக்குவதான குணம

**சத்துவம்** - தன்மை, சுபாவம், வலிமை, உள்ள நிகழ்ச்சி வெளிப்படத் தோன்றும மெய்ப்பாடு

**சந்தடி** - இரைச்சல், கூட்டம

**சந்ததம்** - எப்பொழுதும

**சந்ததி** - வழித்தோன்றல், வமிசம்

**சந்தம்** - நிறம், அழகு, வடிவு, சுகம், செய்யுள் வண்ணம், வேதம, செய்யுள், சந்தனம, துவாரம

**சந்தமாமா** - கூத்திற் கோமாளி தன்னோடு பேசுமவரை விளித்தற்குக் கூறும் சொல், தாசிகள் தொழிலுக்கு உதவியாயிருப்பவனைக் குறிக்கும் சொல்
**சந்நயம்** - சந்தேகம்
**சந்தர்ப்பனை** - சமாதானை
**சந்தர்ப்பம்** - சமயம்
**சந்தவடி** - நான்கு முதல் இருபத்தாறு வரையும் உள்ள எழுத்துக்களாலியன்ற விருத்த அடி
**சந்தவாக்கு** - சுபசகுனம், இழிந்த பழக்கம்
**சந்தனம்** - சந்தனமரம், அரைந்த சந்தனம், தேர்
**சந்தனவெற்பு** - பொதியமலை
**சந்தனு** - வீடுமன் தந்தை
**சந்தா** - கட்டணம்
**சந்தாபம்** - சுடுகை, மனத்துன்பம், நரகங்களில் ஒன்று
**சந்தாளர்** - ராசமஹால் மலைச்சாரலிலுள்ள ஒரு சாதியார் (santals)
**சந்தானகரணி** - அறுந்த உறுப்பைப் பொருத்தும் மருந்து
**சந்தானகுரவர்**- மெய்கண்டதேவர், அருணந்தி சிவாசாரியார், மறைஞானசம்பந்தர்,உமாபதி சிவாசாரியாரென்ற ஆசிரியர் நால்வர்
**சந்தானம்**-பரம்பரை, சந்ததி, குரு பரம்பரை, தேவலோகப் பஞ்ச தருக்களுள் ஒன்று
**சந்தானலட்சுமி** - புத்திர பாக்கியம்
**சந்தி** - பல தெருக் கூடுமிடம், எழுத்துப் புணர்ச்சி, தறுவாய், மூங்கில், ஒரு பண், வரிக்கூத்து வகை, மாலைக் காலம், வணக்கம், திருவிழா, கோயிற் கட்டளை, பாடை

**சந்திக்கூத்து** - திருவிழாவில் கோயில் முன் பெண்கள் ஆடும் கூத்து
**சந்திக்கோணம்** - தேர் உறுப்புக்களுள் ஒன்று
**சந்தித்தல்** - சேர்த்தல், எதிர்தல், காணுதல்
**சந்திபண்ணுதல்** - சந்தியாவந்தனஞ் செய்தல்
**சந்திப்பு** - எதிர்கை, ஆறு தெரு முதலியன கூடுமிடம், இசைவு
**சந்திமான்** - இடைவள்ளல் எழுவருள் ஒருவன்
**சந்திமிதித்தல்**-நான்காம் மாதத்தில் நல்ல வேளையில் குழந்தையைத் தெருச் சந்திக்குத் தூக்கிச் செல்லுதல்
**சந்தியாமடம்** - நித்திய வழிபாடு செய்தற்குரிய நீர்க்கரை மண்டபம்
**சந்தியாவந்தனம்** } காலை உச்சி
**சந்தியவந்தனை** } மாலைகளில் வேத மந்திரங்களாற் செய்யும் வழிபாடு
**சந்திரகணம்** - நூலின் முதற் செய்யுளின் முதலில் அமையும்படி புளிமாங்காய் என்னும் வாய்பாடு பற்றிவரும் நற்கணச் சீர் வகை
**சந்திரகம்** - வண்டு, மயில்தோகை
**சந்திரகலை** - சந்திரன் கூறு, நிலா, பெண்கள் கொண்டையிலணியும் ஓர் அணி
**சந்திரகாசம்** - சிவன் இராவணனுக்குக் கொடுத்த வாள்
**சந்திரகாந்தம்** - சந்திர ஒளியில் நீர் சுரப்பதாகிய ஒரு கல்
**சந்திரகி** - மயில்
**சந்திரகிரகணம்** - இராகு கேதுக்களால் சந்திரன் பிடிக்கப்படுகை

சந்திரகுப்தன்-கி. மு. நாலாம் நூற்றாண்டில வாழ்ந்த மௌரிய சக்கரவர்த்தி
சந்திரகுரு-வெண்முத்து, சுக்கிரன்
சந்திரகுலம்-சந்திரனைக் குல முதல் வனாகக்கொண்ட மரபு
சந்திரசேகரன் - சந்திரனை அணிந்த சிவன்
சந்திரத்தீவு - குருவருடத்துக் கயவில் வடதிசையிலுள்ள தீவு
சந்திரதிசை - வடககு
சந்திரநாடி - பெண்குறி வாயிற் படிந்திருக்கும் சவ்வு
சந்திரபிரபர் - தீர்த்தங்கரர் இருபதது நாலவருள ஒருவர்
சந்திரபிரபை - நிலவு, மகளிர் தலையணி வகை
சந்திரபிறை - மகளிர் கழுததணி வகை
சந்திரபாணி - வயிரக்கல்
சந்திரபிம்பம் - சந்திரவட்டம
சந்திரம் - பொன், இரவின் 15 முகூர்ததங்களுள் ஒன்பதாவது, மிருகசீரிடம்
சந்திரமண்டலம்-சந்திரனது வட்டம்
சந்திரமதி - அரிச்சந்திரன மனைவி
சந்திரமானம் - சந்திரனின் செலவைக்கொண்டு அளக்கப்படும் மாதம் ஆண்டு முதலியன
சந்திரமௌலி - சந்திரசேகரன
சந்திரயோகம் - சன்மராசியிலிருந்து ஏழாமிடம் முதல் பன்னிரண்டாம் இடம் வரையும் ஏழு கிரகங்கள் வரிசையாக நிற்கும் யோகம்
சந்திரலக்கினம் - பிறந்த காலத்தில் சந்திரனிருக்கும் இராசி
சந்திரவங்கி - பிறைவடிவான தலையணி
சந்திரன் - திங்கள, குபேரன், இடைகலை
சந்திராதித்தம் - அருகனது முக்குடையுள ஒன்று
சந்திராபரணம் - ஒரு பழைய சோதிட நூல்
சந்திரிகை - ஒலைச் சுருள, நிலவு
சந்திரோதயம்-சந்திரன் உதிக்கை
சந்திரோபாலம்பனம் - பிரிந்த காதல் விரகவேதனையால சந்திரனைப் பழிததுககூறுகை
சந்தில் - சனி
சந்திவந்தனம் } சநதியாவந்தனம
சந்திவந்தனை }
சந்திவிக்கிரகம் - அடுத்துககெடுக்கை
சந்து - பொந்து, பொருத்து, பல வழி கூடுமிடம், தூது, தூதன், பிளவு, சமாதானம, சந்தன மரம, இசை
சந்தேகம் - ஐயம்
சந்தேசம் - தூது
சந்தை - குறித்த காலததிற் கூடும் கடைகள, கூட்டம, புருவங்களின் நடுவிடம, வேதம்
சந்தைசொல்லுதல் - வேதம் முதலியன ஓதுதல்
சந்தைமுதல் - சந்தை வரி
சந்தோகன் - சாமவேதததுக்குரியவன
சந்தோடம் - மகிழ்ச்சி
சபக்கம் - துணியப்பட்ட பொருள்
சபதம் - சூளுறவு, உறுதி கூறுதல்
சபம் - செபம, மூங்கில், குதிரைக் குளம்பு
சபரம் - கெண்டைமீன்
சபரன் - வேடன்
சபரி - இராமனருள்பெறற ஒரு வேடப் பெண்
சபரியை - பூசை
சபலம் - பயனுளளது, சித்தி, நிலையற்ற உள்ளம்
சபலை - மின்னல், இலக்குமி
சபாசு - மிக நன்று

**சபாபதி** - நடராசமூர்த்தி
**சபித்தல்** - சாபமிடல், செபித்தல
**சபிண்டர்** - பிதிர்ப் பிண்டமிடுதற் குரிய ஏழு தலைமுறைகளுட் பட்ட ஞாதியர்
**சபிண்டி** / **சபிண்டீகரணம்** } சிராத்தம்
**சபை** - கழகம், அம்பலம், சபா மண்டபம
**சப்தசுரம்** - ஏழிசை
**சப்தபங்கி** - சைனர் கூறும் ஏழு வகை வாதமுறை
**சப்தபாதாளம்** - அதலம் விதலம் சுதலம் மகாதலம் இரசாதலம் தலாதலம் பாதாளம் என்னும் கீழேழுலகங்கள
**சப்படி** - வயிரக் குற்றங்களுள் ஒன்று
**சப்பத்தி** - சப்பை முத்து
**சப்பரம்** - தேர வகை
**சப்பரை** - மூடன்
**சப்பளாக்கட்டை** - தாளக்கட்டை
**சப்பளிதல்** - தட்டையாதல்
**சப்பாணி** - நொண்டி, கைகொட் டிகை
**சப்பாணிப்பருவம்** - குழந்தை கை கொட்டி விளையாடும் பருவம்
**சப்பியம்** - நெறிப்பட்ட பேச்சு
**சப்பிரமஞ்சம்** - மேற்கட்டி உள்ள சிங்காரக் கட்டில
**சப்புதல்** - மெல்லுதல், அதுக்குதல்
**சப்பை**-சப்பட்டையானது, வளைவு
**சமகம்** - ஒரு வேத மந்திரம்
**சமக்கிரதம்**-சமககிருதம் வடமொழி
**சமசத்தமம்**-வியாழன் நின்ற இராசிக்கு ஏழாம இராசியில் சுக்கிரன் நிற்கும் நிலை
**சமசம்** - யாகத்தில் சோமரசம் வைக்கும் பாத்திரம்
**சமசித்தத்துவம்** - எல்லாவற்றையும் சமமாகக் கருதும் மன நிலை
**சமசை** - பாடிமுடிக்கும்படி ஒருவனுக்குக் கொடுக்கும் கவி யுறுப்பு
**சமஞ்சிதன்** - கிராமக் கணக்கன்
**சமட்டி** - தொகுதி
**சமணம்** - சமண்
**சமண்** - அருகமதம், அமமணம
**சமதலை** - படைவையின் உள கலைப்ப
**சமதிருட்டி** - வியாழன் அத்தமிக்கச் சுக்கிரன் தோன்றும் தோஷகாலம்
**சமதை** - சமநிலை
**சமத்காரம்** - தோற்றம், பேச்சுத் திறமை
**சமத்தன்** - வல்லவன்
**சமத்து** - திறமை
**சமத்தக்கினி** - பரசுராமன் தந்தை
**சமத்தானம்** - இராச்சியம்
**சமத்து** - திறமை
**சமநிலை** - நடுவுநிலைமை, சாந்தமென்னும் சுவை
**சமநிலைவஞ்சி** - இரு சீரடியால் வரும் வஞ்சி
**சமந்தகம்**-கண்ணபிரான் கழுத்தி லணிந்த மணி
**சமந்தகூடம்** / **சமந்தம்** } இலங்கையிலுள்ள சிவனொளி மலை
**சமபூமி** - மேடு பள்ளமில்லாத பூமி
**சமப்பால்** - முல்லை, நெய்தல் நிலங்கள்
**சமம்** - ஒப்பு, இரட்டை எண், போர், முதுவேனில்
**சமயக்கணக்கர்** - மதவாதிகள
**சமயதத்துவம்** - மதத்தின் அடிப்படையான உண்மைகள
**சமயதிவாகரர்** - நீலகேசி என்னும் சைன நூலின் உரைகாரராகிய வாமன முனிவர்
**சமயமிருத்தல்** - ஓலக்கமிருத்தல்

**சமயம்** - தருணம், அவகாசம், உடன்படிக்கை, மதம்
**சமயலங்கனம்** - சமயக் கொள்கையை மீறுதல்
**சமயவாற்றல்** - சொல்லாற்றல்
**சமயாசாரியர்** - அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்ற சிவனடியார்
**சமயாதீதம்** - பரம்பொருள்
**சமயோசிதம்** - சமயத்துக்குப் பொருத்தம்
**சமரசம்** - ஒற்றுமை
**சமரதன்** - வேறு தேர் வீரனோடு தோலாமற் போர்செய்ய வல்ல தேர்வீரன்
**சமரம்** - கலவிவகை
**சமரபுரி** - திருப்போரூர்
**சமரம்** - போர், முள்ளம்பன்றி
**சமரி** - துர்க்கை
**சமரேகை** - பூமத்தியரேகை
**சமர்** - போர்
**சமர்த்தம்** - மிருதிகளில் விதிக்கப்பட்ட சடங்கு
**சமர்த்தல்** - பொருதல்
**சமர்த்தன்** - வல்லவன்
**சமர்த்து** - திறமை
**சமர்ப்பணம்** - காணிக்கை முதலியன அளிக்கை
**சமலன்** - உயிர்
**சமலாவத்தை** - மலத்தோடு கூடியிருக்கும்போது உயிர் அடையும் நிலை
**சமவாகாரம்** - தேவாசுரர்களுடைய வீரச் செயல்களைக் காட்டுவதாய் மூன்றங்கங்களைக் கொண்ட ரூபக வகை
**சமவாதசைவம்** - முத்தியில் சிவமும், ஆன்மாவுமொக்கு மெனக் கொள்ளும் சைவமதப்பேதம்
**சமவாயம்** - கூட்டம்
**சமவாயிகாரணம்** - முதற்காரணம்
**சமவேதம்** - பிறிதொடு நீக்கமின்றியிருக்கும் பொருள்
**சமழ்தல்** - வருந்துதல்
**சமழ்த்தல்** - வருந்துதல், நாணுதல், தாழ்தல்
**சமழ்வு** - இழிவு
**சமனியகரணி** - புண்ணைப்புடைத் தழும்பையுமாற்றும் மருந்து
**சமனை** - சிவசத்தி, உயிர் பெத்த நிலையில் அடையக்கூடிய உத்தம பதவி
**சமனொளி** - இலங்கையிலுள்ள சிவனொளிமலை
**சமாகிதம்** - அணிவகை
**சமாசம்** - சபை, கூட்டுச்சொல்
**சமாசாரம்** - பத்திரிகை
**சமாசோக்தி** - ஒட்டணி
**சமாதானம்** - அமைதி, நட்பு, தடைக்கு விடை
**சமாதி** - மனத்தைக் கடவுளோடு ஒன்றுபடுத்தி நிறுத்துகை, சங்கற்பம், சமாதிக் குழி
**சமாதிக்கல்** - கல்லறை மூடுங்கல்
**சமாப்தி** - முடிவு
**சமாராதனை** - பிராமண உண்டி
**சமாலம்** - பீலிக்குஞ்சம்
**சமாவர்த்தனம்** } பிரமசரிய விரதம்
**சமாவர்த்தனை** } நீங்கும்படி செய்யும் சடங்கு
**சமாளித்தல்** - பெருமுயற்சியோடு ஒன்றை நிறைவேற்றுதல்
**சமானதை** - சமானம்
**சமானம்** - ஒப்பு
**சமானன்** - பத்து வாயுக்களுள் ஒன்று
**சமி** - அருகன், வன்னி
**சமிக்கை** - சைகை
**சமிதை** - யாகத்துக்குரிய சுள்ளி விறகு
**சமித்தம்** - வேள்வி மண்டபம்

**சமித்தல்** - சிரணித்தல, அழிதல, பொறுத்தல், நடத்தல
**சமித்து** - சமிதை
**சமிராட்டு** - ஏக சக்கராதிபதி
**சமிர்த்தி** - நிறைவு
**சமிந்தார்** - குடிகளிடமவரிதண்டிக் கொண்டு, அரசாக்கு மொதத வரி கொடுதது நிலததை ஆள்வோா
**சமீபம்** - அண்மை
**சமீரணன்** - வாயு
**சமீரணி** - வீமன்
**சமு** - 729 யானை 729 தேர 2187 குதிரை 3645காலாளகொணட சேனை
**சமுகம்** - சன்னிதானம், ஒரு கூட்டத்தினா
**சமுக்காளம்** } விரிப்பு வகை
**சமககாளம்** }
**சமுக்கு** - குதிரை மாடுமுதலியவற்றின் முதுகில இடப்படும தவிசு
**சமுசயம்** - சந்தேகம
**சமுசாரம்** - உலக வாழ்க்கை,குடும்பம
**சமுசாரி** - குடியானவன், இல்லறததான
**சமுச்சயம்** - தொகுதி
**சமுதாடு** - ஈட்டிவகை
**சமுதாயம்** - மககளின் திரள், பொதுவானது
**சமுத்திரகலசநியாயம்** - சமுத்திரத்தில நிரமப நீரிருப்பினும மூகக்கும் முகவையளவே நீா கொளளுதல போலும நெறி
**சமுத்திரம்** - கடல், ஒன்றை அடுதது பதினன்குவட்டம் கொண்டபேரெண்
**சமூகம்** - திரள, சேனைவகுப்பு
**சமூலம்** - இலை மீருகவுள்ள எல்லாம, முழுவதும
**சமேதன்** - கூடியிருப்பவன
**சமை** - பொறுமை
**சமைதல்** - அமைதல், ஆயத்தமாதல், பொருநதல், நிரம்புதல பூப்படைதல், புழுங்குதல், அழிதல, முடிதல்
**சமைத்தல்** - படைததல், செய்தல, ஆயததஞ்செய்தல், பாகஞ் செய்தல், அழிததல்
**சமைப்பு** - முயறசி
**சமையல்** - சமைத்த உணவு
**சமைவு** - நிலைமை, அழிவு, உட்கரணம அடங்குகை
**சம்** - சுகப்பொருளில் சொல்லுக்கு முதலில வரும் வடசொல, மிகுதி, சிறப்புமுதலிய பொருளில வரும வடமொழி இடைச்சொல்
**சம்பகம்** - சண்பகம்
**சம்பங்கி** - ஒருவகைப்பூங்கொடி
**சம்பங்கோழி** - காட்டுக்கோழி
**சம்மடம்** - ஆடை, ஒருபழைய வரி
**சம்பத்து** - செலவம
**சம்பந்தசரணலயர்** - திருஞான சம்பநதமூாததி நாயனரின் நல்மாமன், 16-ம நூற்றுண்டில் கந்த புராணச் சுருக்கம் செய்த ஆசிரியர்
**சம்பந்தம்** - திருமண உறவு,
**சம்பந்தர்** - திருஞானசமபநதமூர்த்திநாயனா
**சம்பம்** - வச்சிராயுதம, மரவைரம, எலுமிச்சை, இடம்பம்
**சம்பரசூதனன்** - காமதேவன்
**சம்பரம்** - நீர், எண்காற்பறவை
**சம்பரன்** - தசரதனை கொல்லப்பட்ட அசுரன், காமனுற்கொல்லப்பட்ட அசுரன்
**சம்பராரி** - காமன்
**சம்பர்க்கார்த்தம்** - சூரிய கிரகணத்தில சூரியன சநதிரன் இவற்

றின் பாதிக் குறுக்களவைக் கூட்டியளந்த அளவு
சம்பவம் - நிகழ்ச்சி
சம்பவை - உமை
சம்பளம் - வழியுணவு, வேதனம், எலும்மிச்சை
சம்பன்னன் - செல்வமுள்ளவன், நிறைந்தவன்
சம்பா - உயர்ந்த நெல்வகை
சம்பாகம் - நன்றாகச் சமைத்தது
சம்பாதி - சடாயுவின் சகோதரனுகிய கழுகரசன்
சம்பாதித்தல் - தேடிப்பெறுதல
சம்பாத்தியம் - பொருள் ஈட்டுகை
சம்பாரம் - கூட்டுவர்க்கம
சம்பாவனை - மரியாதை, வெகுமானம
சம்பாவிதம் - நிகழக்கூடியது
சம்பான் - தோணி
சம்பிரதம் - இந்திரசாலம்
சம்பிரதாயம் - குரு பரம்பரையாக வந்த உபதேசம், சாமர்த்தியம், தொன்றுதொட்ட வழக்கம்
சம்பிரதி - கணக்கன்
சம்பிரமம் - களிப்பு, சிறப்பு, பரபரப்பு
சம்பு - சம்பங்கோரை, நெட்டி, சிவன், திருமால, பிரமன், சூரியன், நாவல, நாவலந்திவு, நரி
சம்புகம் - நரி
சம்புகேச்சுரம் - ஆனைக்கா
சம்புடம் - சிறுசெப்பு, புத்தகப் பகுதி
சம்புத்தீவு - நாவலந்திவு
சம்புநாவல் - பெருநாவல
சம்புவராயர் - வன்னியர், கள்ளர்களின் பட்டப்பெயர்
சம்பூரணம் - முடிவு, நிறைவு
சம்பை - மின்னல், செழிப்பு
சம்பைச்சரக்கு-மட்டச்சரக்கு
சம்போகம் - புணர்ச்சி
சம்போர் - பூதம
சம்மட்டி - நுதிரைச்சவுக்கு, சுத்தியலவகை
சம்மட்டிமக்கள் - உறவினரல்லாதாரோடு மணம புரிந்துகொள்ளும் களளச் சாதியினர்
சம்மதம் - உடன்பாடு, நட்பு
சம்மதி - சம்மதம
சம்மனசு - தேவதூதன்
சம்மாரம் - அழிவு
சம்மானம் - வெகுமதி
சம்மௌனம் - கலப்பு, கூட்டம
சம்யோகம் - சேர்க்கை
சம்ரட்சணம் } காப்பாற்றுகை
சமாட்சணை }
சம்வச்சரம் - ஆண்டு
சம்வரை - உயிரைக்கன்ம மணுகாமறறடுப்பது
சம்வர்த்தம்-மணிபொழியும் மேகம்
சம்வாகம் - நெல்லும் புலலும் நிறைந்த மலையூர
சம்வாதம் - தர்க்கம
சம்வித்து - அறிவு
சம்வேகம் - அறத்திலும அறப்பயனிலும ஆசை உடைமை
சய - இருபத்தெட்டாவது ஆண்டு
சயகண்டி - சேமக்கலம
சயங்கொண்டசோழன்-1-ஆம இராசராச சோழன்
சயங்கொண்டான் - கலிங்கத்துப் பரணி செய்த புலவர் (11-ம் நூற்றாண்டு)
சயசய - வெறறிகுறித்த வாழ்த்து மொழி
சயசீலன் - வெற்றியாளன்
சயநரன் - 1-ஆம குலோத்துங்கன் சிறப்புப்பெயர
சயதாளம் - ஒன்பது தாளத்தி லொன்று
சயந்திரதன்-துரியோதனனது சகோதரி கணவன்

**சயந்தம்** இந்திரனது ஒலக்கமண்டபம, இறந்துபட்ட ஒரு நாடகத தமிழநூல், அபிநயவகை
**சயந்தன்** - இந்திரகுமாரன்
**சயந்தனம்** - தோ
**சயந்தி** - வாதமடக்கி, சிற்றகததி
**சயபாளம்** - நேர்பாளம
**சயபேரிகை** - வெற்றிமுரசு
**சயமகள்** - தூர்க்கை
**சயமரம்** - சுயமவரம, வெறறித தோரணம்
**சயமாகீர்த்தியன்** - நிலந்தருதிருவிற் பாண்டியன்
**சயம்** - வெறறி, சூரியன், கூட்டம், மாலை சயரோகம, சாக்கரை, ஆமடல
**சயம்பு** - சிவன், பிரமன், அருகன், தானே உண்டாவது
**சயம்புலிங்கம்** - பராரதலிஙகந் தொனறு
**சயவிசயர்** - வைகுண்டததில திருமால கோயில் காககும் இருவர்
**சயனம்** - படுக்கை, நித்திரை, புணாச்சி
**சயா** - கடுக்காய்
**சயிக்கினை** }
**சயிக்கை** } சைகை
**சயிகை** }
**சயித்தம்** - பெளத்த ஆலயம்
**சயித்தல்** - வெல்லுதல்
**சயித்தியம்** - குளிர்ந்த காலம், குளிர்ச்சி
**சயிந்தர்** - சிந்து தேசத்திலார
**சயிந்தவம்** - குதிரை, தலை
**சயிந்தவி** - ஓர் இராகம்
**சயிலகோபன்** - இக்கிரன்
**சயிலம்** - மலை
**சயிலாதி** - கைலாசம், நந்தி
**சயிலேகம்** - ஒரு வாசனைப்பண்டம்
**சயை** - திதியை அட்டமி திரயோதசி என்னும திதிகள், துர்க்கை
**சரகண்டம்** - பூமததிய ரேகைக்கும் குறிப்பிட்ட இடததிற்குமுளள கிரகங்களின் உச்சவேறுபாடு
**சரகதி** - அமபுபோற் செலலுமகுதிரைககதி
**சரகம்** - தேனீ, வண்டு
**சரகூடம்** - பகைவர படைககலமதாககாதவாறு அமபினாற் கட்டும்பந்தல்
**சரக்க** - விரைவாக
**சரக்கறை** - பண்டங்கள வைக்குமிடம, பொன்னறை
**சரக்கு**-வாணிகப்பண்டம், பொன், மருந்துப்பொருள்
**சரக்கொன்றை** - சரமாகப் பூக்குமகொன்றை
**சரசசல்லாபம்** - காதற்பேச்சு
**சரசம்**-பரிகாசம், காமச்சேட்டை, இனிய குணம
**சரசரத்தல்** - சருகு ஒலிததல்
**சரசரப்பு** - ஒலிக்கை, மொருமொரு வென்றிருக்கை
**சரசு** - நீர்நிலை
**சரசுவதி** - கலைமகள், ஒருநதி
**சரசுவதிபண்டாரம்** - புத்தகசாலை
**சரசுவதிபூசை** - நவராத்திரியின் ஒன்பதாம்நாள்
**சரசுவதிமால்**-தஞ்சை அரண்மனையிலிருப்பது போன்ற புத்தகசாலை
**சரசுவதிமால்** - தஞ்சை அரண்மனை
**சரசுவதியந்தாதி** - கம்பர் சரசுவதியைப் புகழ்ந்து பாடிய ஓர் அந்தாதி
**சரசோதி** - சரசுவதி
**சரச்சொதி** - பார்வதி
**சரடம்** - ஓந்தி
**சரடு** - முறுக்குநூல், கழுத்தணிவகை

**சரணம்** - பாதம், வேதப்பகுதி, கீர்த்தனத்தின் மூன்றாம் உறுப்பு அடைக்கலம், மருதநிலத்து நகரம், வீடு, மயிற்றோகை, பெருங்காயம், பாலைநிலத்தோட்டி

**சரணர்** - வீரசைவப் பெரியார்

**சரணாகதி** - அடைக்கலம் புகுகை

**சரணாரவிந்தம்** - பாததாமரை

**சரணார்த்தி** - அடைக்கலந் தேடுபவன்

**சரணி** - வழி

**சரண்** - பாதம், அடைக்கலம்

**சரதம்** - உண்மை

**சரத்ருது** - கூதிர்காலம்

**சரநட்சத்திரம்** - புனர்பூசம், சுவாதி திருவோணம், அவிட்டம், சதயம் என்னும் சுபநட்சத்திரங்கள்

**சரபம்** - எண்காற்புள், மலையாடு

**சரப்பணி** - வயிரமழுத்திய கழுத்தணி வகை

**சரப்பளி** - பொன்னாலான கழுத்தணிவகை

**சரமகவி** - இறந்தவர்மீது இரங்கிப்பாடும் கவி

**சரமம்** - முடிவு, மேற்கு

**சரமாரி** - அம்புமழை

**சரம்** - நடை, இயங்குதிணை, அம்பு, திப்பலி, மணிவடம், நீர், இசைச்சுரம், யுத்தம், தனிமை

**சரயு** - அயோத்திக் கருகிலுள்ள ஆறு

**சரராசி** - பயணத்துக்குச் சுபகாலமாகக் கொள்ளப்படும் மேடம் கற்கடகம் துலாம் மகரம் என்னும் இராசிகளுள் ஒன்று

**சரவணபவன்** - முருகக்கடவுள்

**சரவணப்பொய்கை** - முருகக் கடவுள் தோன்றிய நீர்நிலை

**சரவணம்** - நாணற்காடு

**சரவன்** - அம்பெய்வோன்

**சரளம்** - சுலபம், ஒழுங்கு

**சராவளி** - சர வரிசை

**சரளை** - சிறுமணற் கோத்த கட்டியான கல்

**சரற்காலம்** - மழைக்காலம்

**சரள** - நேர்

**சராசரம்** - இயங்குதிணை நிலைத்திணைப்பொருள், உலகம்

**சராசனம்** - வில், அரசமரம்

**சராயு** - கருப்பை

**சராயுசம்** - கருப்பையிற் தோன்றுவன

**சராவம்** - அகல், சகடை

**சரி** - மலைச்சாரல், கூட்டம், கைவளை, ஒப்பு, சம்மதிகுறிப்பு

**சரிகை** - பொன்வெள்ளி களாலாகிய இழைகள்

**சரிக்கட்டுதல்** - ஒப்பிடுதல், இணக்கமாகச் செய்தல்

**சரிதம்** - சரித்திரம்

**சரிதல்** - சாய்தல், குலைதல்

**சரிதன்** - செயலிற் சிறந்தவன்

**சரிதை** - சரித்திரம், சரியை, பிச்சை

**சரித்தல்** - சஞ்சரித்தல்

**சரித்திரம்** - வரலாறு

**சரிமணி** - மகளிர் இடையிலணியும் ஓரணி

**சரிமேரை** - குடிகளின் உரிமை

**சரியாதல்** - முடிவாதல்

**சரியை**-கடவுளை உருவத் திருமேனியாக வழிபடுகை, ஒழுக்கம்

**சரியையில்ஞானம்** - தியான பாவனையில் உறைப்பான அனுபவ உணர்ச்சி

**சரியையில் யோகம்** - மனத்தில் கடவுளைத் தியானிக்கை

**சரியையிற்கிரியை**-கடவுள் மூர்த்தங்களுள் ஒன்றைத் தியானிக்கை

**சரியையிற் சரியை** - கோயிலில் பெருக்கல் மெழுகல் முதலிய பணிச் செயல்கள்

சரிவர - முழுதும், கிரமமாய்
சரிவு - சாய்வு, ஓரம
சரிற்புதல்வன் - வீடுமன்
சரீரபதனம் - மரணம
சரீரம் - உடல
சரீரி - ஆன்மா
சரு - சோறு
சருகு - உலர்ந்த இலை
சருக்கம் - நூற்பிரிவு
சருக்கரை - சர்க்கரை
சருக்கரைமாமணி - கற்கண்டு
சருக்கி - பாண்டு விளையாட்டு
சருச்சரை - சொரசொரப்பு
சருப்பதோத்திரம் - கோலவகை, கவிவகை
சருமபந்தம் - மிளகு
சருமம் - தோல, கேடகம்
சருமாசனம் - யோகாசனம்
சருவக்கியன் - சாவஞ்ஞன்
சருவந்து - தலைக்கவசம
சருவம் - வாயகன்ற பாத்திரம, சட்டுவம், சர்வம்
சருவரி - இரவு, இருள
சருவல் - நேசப்பான்மை, கொஞ்சிக குலாவுகை
சருவுதல் - பழகுதல், போராடுதல, கொஞ்சிக் குலாவுதல்
சரை - நரைமயிர், கிழத்தனம்
சரையலம் - பயிரக் குறறம்
சரோசனம் - கோபததோடிருக்கை
சரோருகம் - தாமரை
சரோருகன் - பிரமன்
சர்க்கம் - சருக்கம்
சர்க்கரை - கரும்பிலிருநது எடுக்கும இனிய பொருள்
சர்ச்சரை - சருச்சரை
சர்ச்சை - ஆராய்ச்சி
சர்ப்ப - விரைந்து நட
சர்ப்பகேது - துரியோதனன்
சர்ப்பசயனம் - பாமபணை
சர்ப்பம்-பாம்பு, பகல முகூாத்தம 15-ல் 3-வது
சர்ப்பனை - வஞ்சனை
சர்மா - பிராமணர் பட்டப்பெயா
சர்வசங்கநிவிர்த்தி-எல்லாப் பொருளிலும் பறறுவிடுகை
சர்வசங்காரகாலம் - உலகமுழுதும் அழியுஙகாலம்
சர்வசார மூலிகை - கற்றாழை, நீராரை, சிறுசின்னி, பற்படாகம, வெள்ளறுகு, வல்லாரை, பெருங் கரநதை, விட்டுணுகாந்தி, சிவனார்வேம்பு முதலிய ஒனபது மூலிகளுக்கும் வழங்கும் பொதுப் பெயர்
சர்வசித்து - இருபத்தொன்றாவது ஆணடு
சர்வஞ்ஞத்துவம் - முற்றுமறிந்தவனாயிருக்கும் தன்மை
சர்வஞ்ஞன் - கடவுள்
சர்வதாரி - இருபத்திரண்டாவது ஆண்டு
சர்வமானியம் - வரியின்றி விடப்படும நிலம
சர்வம் - முழுதும்
சர்வவியாபி - எஙகும நிறைந்த கடவுள
சர்வாதிகாரி - எல்லாக் காரியங்களையும் கவனிக்கும் அதிகாரி
சர்வேச்சுரன் - கடவுள
சலகு - முததுச் சிப்பி
சலகை - தோணி
சலக்கிரீடை - நீர் விளையாட்டு
சலங்கை - சதங்கை
சலங்கை முன்தாங்கி - இரண்டாம விரலில அணியும் மோதிரம
சலசந்தி - இரண்டு கடல்களை இணைக்கும குறுகிய நீர்ப் பகுதி
சலசம் - தாமரை, முத்து, பாசி
சலசரம் - மீன், மீனராசி, தோணி முதலியன

சலசலோசனன் - திருமால்
சலசாதி - நீர் வாழ்வன
சலசை - இலக்குமி
சலஞ்சலம் - ஆயிரம் வலம்புரி சூழ்ந்த சங்கு
சலதம் - மேகம்
சலதரங்கம்-நீரலை, ஒருவகை வாத்தியம்
சலதரம் - முகில், நீர்நிலை
சலதாரி - சிவன்
சலதாரை - சாக்கடை
சலதி - பொய் பேசுபவள்
சலதோடம் - தடுமல், சளிப்பு
சலத்தம்பனம் - நீரின் சத்தியை மாற்றும் வித்தை
சலநிதி - கடல்
சலந்தரன் - சிவனால் மடிந்த அசுரன்
சலபதி - வருணன்
சலமிடுதல் - அர்க்கியங்கொடுத்தல்
சலபம் - விட்டில்
சலப்பிரளயம் - பெருவெள்ளம்
சலம் - மூத்திரம், நடுக்கம், அசையும் அம்புக்குறி, சுழற்சி, தணியாக் கோபம், பொய்மை, வஞ்சனை, தீயசெயல், மாறுபாடு, போட்டி, இலாமிச்சை
சலராசி - கடல்
சலரோகம் - நீரிழிவு நோய்
சலலம் - முட்பன்றியின் முள்
சலலிங்கம் - மார்பில் அணியும் இலிங்கம்
சலவர் - நெய்தல்நில மக்கள்
சலவன் - வஞ்சகன், பகைவன், நெய்தல் நிலத்தோன்
சலவியன் - கோபமுள்ளவன்
சலவை - வெளுத்த துணி
சலவைக்கல் - அழுத்தஞ் செய்யப்பட்ட கல்
சலனம் - அசைவு, சஞ்சலம், துன்பம், மனதிற் கற்பிதத்துப் பூசிக்கப்படும் சிவலிங்கம்
சலனன் - அசையும் காற்று
சலனை - துன்பம்
சலன் - காலம்
சலாகாபுருடர் - 24 தீர்த்தங்கரரை உள்ளிட்ட 63 சைனப் பெரியார்
சலாகை - சிறு இருப்பு, காந்தம், சவளம், நன்மணி, வாளவலயம், வரிச்சல்
சலாங்கு-பொய்யாப்புள், கொசுகு
சலாந்தரு - நாட்டிய உறுப்புவகை
சலாபம் - இலங்கையில் முத்துக் குளிக்குமிடம்
சலாம் - வந்தனம்
சலிகை - செலவாக்கு, இளக்காரம்
சலித்தல் - சோர்தல், அசைதல், வெறுத்தல்
சலிப்பு - வெறுப்பு, சோர்வு
சலிலம் - நீர்
சலீகம் - போர்
சல்லகம் - முள்ளம்பன்றி
சல்லகி - ஆத்தி, கருவா
சல்லடம் - குறுகிய காலசட்டை
சல்லடை - தானியமரிக்கும் கருவி
சல்லரி - கைத்தாளம், மேளம்
சல்லவட்டம் - கேடயம்
சல்லா - மெல்லிய துணிவகை
சல்லாத்து - ஒருவகை உணவு
சல்லாபம் - சம்பாஷணை, சரசப் பேச்சு
சல்லாபித்தல் - கலந்து பேசுதல்
சல்லி - எல்லரி, சிறுகல், ஆபரணத் தொங்கல், அதிமதுரம், சிறுகாசு
சல்லிகை - பெரும்பறை
சல்லிக்கட்டு - ஏறுதழுவும் விழா
சல்லியகரணி - காயத்தை மாற்றும் மருந்து

சல்லியம் - முள்ளம்பன்றி, எலும்பு, ஆணி, இருப்புக்கோல், ஈட்டி, உபத்திரவம், பூமிக்குள் இருப்பதை அறியும் ஆருடம், செஞ்சந்தனம்
சல்லியன் - நகுல சகாதேவரின் மாமன், அக்கிரமம்
சவக்கம் - சதுரவடிவான வைரம்
சவக்களித்தல் - கெட்ட சுவையுடையதாயிருத்தல்
சவங்குதல் - மெலிதல்
சவடன் - பயனற்றவன்
சவடி - பூஷாரணிவகை, காதணி, தோட்பட்டெலும்பு
சவுடு - உவர்மண்
சவண்டலை - மரவகை
சவட்டுதல் - மெல்லுதல், வளைவாக்குதல்
சவணம் - கேள்வி
சவம் - பிணம், பிசாசம், மூங்கில்
சவரம் - மயிர்மழிக்கை, சாமரம்
சவரன் - வேடன், பாலைநிலமக்கள், பாலைநிலத் தலைவன்
சவரி - சாமரம், கவரிமான், வேட சாதிப் பெண்
சவர் - உவர்
சவலி - அரைக்கால் வராகன்
சவலை - மனக்குழப்பம், வருத்தம் இளமை, மின்னல், இசைப்பாவகையுள் ஒன்று
சவலைவெண்பா - தனிச் சொல்லின்றி இரண்டு குறள வெண்பாக்களை இணைத்துச் செய்யும் வெண்பா
சவளம் - குந்தம்
சவளி - மகளிர் கழுத்தணிவகை
சவளுதல் - வளைதல
சவள்தடி - ஓடக்கோல்
சவனம் - வேகம, வேள்வி
சவனன் - வேகமுடையவன்

சவன்னன் - சத்திரியப பெண்ணுக்கும பிராமணனுக்குப் பிறந்தவன்
சவாது - சவ்வாது
சவாய் - பாய்மரந்தாங்கும கயிறு
சவாரி - வண்டி முதலியவற்றில செலுத்துகை
சவாலக்கம் - வயிரமுண்டாகும இடங்களில் ஒன்று
சவி - ஒளி, அழகு, நேர்மை, வல்லமை, திருவிழா, சுவை
சவிகற்பம் - ஒரு பொருளைப் பெயர சாதி குணம முதலியவற்றால வேறு பிரித்தல்
சவிதா - சூரியன்
சவியம் - ஆனைத்திப்பிலி
சவுகதன் - புத்தன்
சவுக்கம் - சதுரம, துணித்துண்டு
சவுக்கணி - காதணிவகை
சவுக்காரம் - வழலை உப்பு, அழுக்கு நீக்கும் பொருள்
சவுக்கு - குதிரைச் சாட்டை. ஒரு வகை மரம
சவுக்கை - சதுரத் திண்ணைக் கொட்டகை, காவற்கூடம், சுங்கச் சாவடி
சவுங்கல் - சவங்கல், மானம் மழுங்கினவன்
சவுசம் - சௌசம்
சவுதம் - நாட்டியவகை, வைதிகச சடங்கு
சவுந்தரம் } அழகு
சவுந்தரியம் }
சவுபானம் - படிக்கட்டு
சவுமியம் - சாந்தம்
சவுரமாதம் - சூரியன் ஓர் இராசியைக் கடந்து செல்லும் நாள் அளவாற் கணக்கிடப் பெறும் மாதம்
சவுரி - திருமால், யமன்
சவுரியம் - களவு, சூரத்தனம்

சவை - கற்றறிந்தோர், ஆடவர் கூட்டம், மிதுனராசி
சவைவாரியர் - கிராமச் சபையின் நிர்வாகக் கூட்டத்தார்
சவ்வாது - ஒருவகை வாசனைப் பொருள்
சவ்வாதுப்புலவர் - சேதுபதியின் ஆதரித்த புலவருள் ஒருவராயிருந்த மகாநதிப் புலவர்
சவ்வியசசீ - அருச்சுனன்
சவ்வியம் - இடைப்பக்கம்
சவ்விரம் - ஒரு நாடு, ஒரு மருந்து, காடி
சவ்வு - மூடுதோல்
சழக்கு - குற்றம், தீமை, தளர்ச்சி
சழங்குதல் - சோர்தல, நெகிழ்தல், தொங்கிப்பசைதல
சழிதல் - சப்பளிதல், நெருங்கிக் கிடத்தல
சழுக்கம் - மனமழிகை
சளகன் - நிலையற்ற மனமுடையவன்
சளம் - துன்பம், வஞ்சகம்
சளன் - வஞ்சகன்
சளி - குளிர்ச்சி, மூகக்குச்சளி, கபம், பிசின்
சளுக்கன் - இடம்பக்காரன்
சளுக்கி - இடம்பக்காரி
சளுக்கியன் } சளுக்கிவேந்தன்
சளுக்கன் }
சளுக்கு - இடம்பம்
சளுகம் - அட்டை
சன்னிடுதல் - குரைத்தல்
சன்னை - தொந்தரவு
சறுக்கல் - வழுக்கல்
சறுக்குதல் - வழுக்குதல்
சறைமணி - பசுக்கள் ஓசையைக் கேட்டு உடன் வருதற்காக இடையர் அரையிற் கட்டி ஒலிக்கும் மணி
சறையினன் - பேதைவன்

சற்கரித்தல் - உபசரித்தல்
சற்கருமம் - நற்செய்கை
சற்காரம் - உபசாரம்
சற்காரியவாதம்-உற்பத்திக்கு முன் னுள்ள காரியப்பொருள் காரணப்பொருளில் உள்ளது என்னும் கொள்கை
சற்குரு - ஞானாசிரியன்
சற்சனர் - நல்லோர்
சற்சூத்திரன் - சமஸ்காரம் பெற்ற சூத்திரன்
சற்பம் - சாப்பம்
சற்பனை - வஞ்சனை
சற்பாத்திரம் - தானம் பெறுதற்குத் தகுதியானவன்
சற்பாவம்-உளதாந்தன்மை; சற்குருவைப் பிரமமாகப் பாவிக்கை
சற்புத்திரன் - நற்குண நற்செய்கை யுள்ள புதல்வன்
சறுறு - சுலபம், கொஞ்சம்
சனகம் - சாதிக்குக் காரணமான சூக்கும வினை
சனகன் - பிதா, சீதையின் பிதா, சனகாதியருள் ஒருவராகிய முனிவர்
சனகாதியர் - சனற்குமாரர், சனந்தனன், சனகன், சனாதனன் என்னும் நான்கு முனிவர்
சனகி - சானகி
சனபதம் - நாடு
சனபதி - அரசன்
சனமேசயன் - பரீட்சித்தின் மகன்
சனம் - மக்கட் கூட்டம்
சனலோகம் - பிதிரர் வாழிடம்
சனற்குமாரம் - உபபுராணத்தொன்று
சனனம் - பிறப்பு
சனாதனதர்மம் - பழமையான அறவொழுக்கம்
சனார்த்தனம் - வற்கலை என்னும் திருமால் தலம்

**சனி** - ஓர் கிரகம், சனிக்கிழமை, துன்பம்

**சனித்தல்** - பிறத்தல்

**சனிப்பு** - பிறப்பு

**சனிவளையம்** - மகளிர் அணியும் காதணி வகை

**சனு** - வேண்டியவன்

**சன்மச்சனி** - சன்மராசியிலிருக்கும் சனி

**சன்மநட்சத்திரம்** - ஒருவன் பிறந்த நட்சத்திரம்

**சன்மப்பகை** - இயற்கைப் பகை, தீராப் பகை

**சன்மம்** - பிறப்பு

**சன்மராசி** - பிறந்தகாலத்தில் சந்திரனிருந்த ராசி

**சன்மலி** - இலவு, நரகத்தொன்று

**சன்மாந்தரம்** - வேறு பிறவி

**சன்மார்க்கசித்தியார்** - அம்பலவாண தேசிகர் இயற்றிய சித்தாந்த சாத்திரம்

**சன்மார்க்கம்** - நன்னெறி

**சன்மானம்** - வெகுமதி

**சன்மினி** - தூர்க்கைக்குத் தொண்டு புரியும் பெண்பேய்

**சன்னகம்** - பூங்கருவி என்னும் படைக்கலம்

**சன்னதம்** - ஆவேசம், கடுங்கோபம்

**சன்னத்தம்** - ஆயத்தம்

**சன்னத்தன்** - கவசம் பூண்டவன், போருக்காயத்தமாயிருப்பவன்

**சன்னபின்னம்** - சின்ன பின்னம்

**சன்னம்** - நுண்மை, நுண்ணிய பொடி

**சன்னல்** - சாளரம்

**சன்னவீரம்** - வெற்றிமாலை

**சன்னுகம்** - போர்க்கவசம்

**சன்னுசம்** - சன்னியாசம்

**சன்னுசி** - சன்னியாசி

**சன்னி** - நோய்வகை, தோற் செவியுடையது

**சன்னிதானம்** - திருமுன்பு, மடாதிபதிகளைக் குறிக்க வழங்கும் மரியாதைச் சொல்

**சன்னிதி** - கோயில் அல்லது பெரியார்களின் திருமுன்பு

**சன்னியாசம்** - துறவு

**சன்னியாசி** - துறவி

**சன்னு** - கங்கையை உண்டு செவி வழியாகவிட்ட முனிவர்

**சன்னை** - குறிப்பு, சமிக்கை, பரிகாசவார்த்தை

**சன்னைசயிக்கினை** - சாடைமாடை

## சா

**சா** - வடகோட்டின் ஒரு பகுதி பின் இருபுனைகளையும் சேர்க்கும் கோடு, சாதல்

**சாகசபட்சி** - குலிங்கமென்னும் பறவை

**சாகசம்** - துணிவு, பாசாங்கு, மெய்மை, பானை

**சாகதன்** - துணிவுள்ளவன்

**சாகதுண்டம்** - அகில்

**சாகத்தீவு** - தேக்கந்தீவு

**சாகபட்சணி** - இலையுணவு கொள்ளும் பிராணி

**சாகசம்** - வெள்ளாடு, தேனீ, இலை, இலைக்கறி, தேக்கு, சாகத்தீவு

**சாகரம்** - கடல், விழித்திருக்கை, பதினாயிரம் கோடி எனும் எண்

**சாகலம்** - வெள்ளாடு

**சாகாடு** - வண்டி, வண்டியுருளை

**சாகாமூவாப்பேருரு** - திருவிளக்கெரிக்கும் நெய்யின் பொருட்டுக் கோயிற்கு விடப்படும் ஆடுமாடுகள்

**சாகி** - மரம்

**சாகித்தியம்** - செய்யுள், இசைப் பாட்டு

**சாகியம்** - நட்பு

சாகினி - சிறுகீரை, சேம்பு
சாகுபடி - பயிர்செய்கை
சாகேதம் - அயோத்தி
சாகை - மரக்கிளை, வசிக்குமிடம், வேதத்தின் உட்பிரிவு, வேதபட, இலை, வட்டில, இறப்பு
சாக்காடை - சலதாரை
சாக்காடு - சாவு
சாக்காளி - தன்னுருவை மறைத்துக்கிடக்குமபுழு
சாக்கி - சாட்சி, சககிமுக்கிக்கல்
சாக்கியநாயனர் - 63-வருள ஒருவர
சாக்கியமுனி - புத்தர்
சாக்கியம் - பௌத்தமதம்
சாக்கியர் - பௌத்தர், சைனர்
சாக்கிரதை - விழிப்பு
சாக்கிரம் - விழிப்புநிலை
சாக்கு - வீண்காரணம, கோணிப்பை
சாக்குருவி - துன்னிமித்தக் குறியான சத்தமுடைய ஆந்தை வகை
சாக்கை - நிமித்திகன், அரசர் கருமத தலைவன், சோதிடன்
சாக்கையன் - கூத்தாடும ஒரு சாதியான, நிமித்திகன்
சாங்கமிலார் - சாதியால் விலக்குப் பட்டவர்
சாங்கம் - சாயல, பத்திரம்
சாங்கரியம் - கலப்பு
சாங்கிமம் - மருதயாழ்த்திறவகை
சாங்கியம் - கபிலமதம
சாங்கேதிகம்-அடையாளம் கட்டுப்பாடு முதலியவற்றல் நிகழ்வது
சாங்கோபாங்கம் - முழுமை
சாசபுடம் - பஞ்சதாளத்தொன்று
சாசனம் - கட்டளை, கல்வெட்டு செப்புப்பட்டையம முதலியன,
சாசாரம் - ஒரு தேவருலகு
சாசி - முலைப்பால
சாசுவதம் - நித்தியம, அசையாநிலை
சாடவம் - ஆறுசுரமுள்ள இராகம்
சாடி - பாண்டவகை, சோளமொழி, உழுகால, ஓர அளவை, சிலை
சாடு - கைக்கிடும் உறை, பேச்சுச் சாதுரியம, வண்டி
சாடுதல் - அசைதல, சாய்ந்து நிறறல, கையால எறிதல
சாடுவர் - நாவலர
சாடை - சாயல, ஒப்பு, சைகை
சாட்கோல் - சாணளவுள்ளகோல்
சாட்சி - சான்று, நேரிற் பார்த்தவன்
சாட்சியம் - சாட்சி
சாட்டி - பயிரிடும்நிலம்
சாட்டியம் - பொய்
சாட்டுதல் - சுமத்துதல்
சாட்டுநிலம் - பசும்புற்றரை
சாட்டை - சவுக்கு, பமபரமாட்டுங் கயிறு
சாணகம் - சாணம
சாணக்கியம் - தந்திரம
சாணக்கியன் - சந்திரகுப்த மௌரியனின் மந்திரி
சாணம் - சாணி, சந்தனக்கல், தழும்பு, நாராலாகிய பொருள்
சாணாந்தான் - ஒருவகைப் புழு
சாணன் - வீரன்
சாணுகம் - சாணம்
சாணுன் - கள்ளிறக்கும் சாதியான
சாணி - சாணம்
சாணை - சாணைக்கல்
சாணைக்கல் - ஆயுதம்தீட்டும கல்
சாண் - ஒன்பதங்குலமுள்ள அளவு
சாண்டு - பூப்புநீர
சாதகபுடம் - சாதகபடகணிக்கை
சாதகப்புள் - வானத்தினின்று விழும மழைத்துளியை உண்டு வாழும் பறவை

**சாதகம்** - பிறப்பு, பிறவிக்குணம், கிரகபலன், பயிற்சி, துணைக் காரணம, அனுகூலம், பூதம், சாதகப்புள், மறைப்பு

**சாதகன்**- பயிற்சியுள்ளவன், யோக வழி நிற்போன், மாணுக்கன், உதவியாளன், பூதம, சாதகக் குறிப்பு வல்லோன்

**சாதகாலங்காரம்** - கி. பி. 1665-ல் கீரனூர் நடராசன் இயற்றிய ஒரு சோதிடநூல்

**சாததும்பம்** - பொன்

**சாதம்**-பிறப்பு, இளமையுடையது, உண்மை, கூட்டம, சததியோ சாதமந்திரம, சோறு

**சாதரூபம்** - நால்வகைப் பொன் களுள் ஒன்று

**சாதல்** - இறத்தல

**சாதவாகனம்** - சாதவாகனனுல் செய்யப்பெறற ஒரு தமிழ் நூல்

**சாதவாகனன்** - சாதவாக வமிசதது ஓர் அரசன், ஐயனுர்

**சாதவேதா**- நெருப்பு

**சாதனசதுட்டயம்** - நான்கு குணங் கள்

**சாதனம்** - கருவி, பயிற்சி, அடையாளம், துணைக்காரணம், இடம

**சாதனை** - சாதிக்கை, பயிற்சி, பொய்

**சாதன்மியம்** - ஒப்புமை

**சாதா** - சாதாரணம்

**சதாக்கியம்** - சததியுடன் சேர்ந்த சிவம

**சாதாரண** - அறுபது ஆண்டுகளுள் ஒன்று

**சாதாரணம்** - பொதுவானது, எளிது

**சாதாரம்** - ஆதாரத்தோடுகூடியது

**சாதாரி** - செவ்வழியாழ்த திற வகை

**சாதாளுழு** - கடற்பூண்டுவகை

**சாதாளி** - மருதயாழத்திறவகை

**சாதி** - குலம, பிறப்பு, இனம, திரள் சாதிக்காய். பிரம்பு

**சாதிக்காய்** - ஒருவாசனைககாய்

**சாதிங்குலிகம்** - சாதிலிஙகம

**சாதிரம்** - சாதிக்காய்

**சாதித்தல்** - நிலைபேறுறுதல நிலை நாட்டுதல், விடாது பறறுதல், கண்டித்தல, அளித்தல, அழித் தல

**சாதிப்பன்னம்** - சாதிபத்திரி

**சாதிப்பாய்** - பிரப்பம்பாய்

**சாதிப்பிரட்டன்** - சாதிவிலக்குண்டவன்

**சாதிப்பூ** - சாதிபதநிரி

**சாதிபத்திரி** - சாதிககாயை மூடி யிருககும தோல்

**சாதிமை** - பெருமை

**சாதிரை** - ஊர்வலம

**சாதிலிங்கம்** - பாஷாணவகை

**சாது** - நல்லது, அருகன, துறவி, காரமின்மை

**சாதுகை** - சாதகுவிகம்

**சாதுயர்** - மரணவத்தை

**சாதுரங்கம்** - சதுரங்க சேனை

**சாதுரியம்**-சாமர்த்தியம, நாகரிகம்

**சாதுவன்** - நல்லவன், புலன்களடக் கியவன்

**சாதேவன்** - சகதேவன்

**சாத்தந்தை** - சாத்தனுக்குத்தந்தை

**சாத்தம்** - சத்திமதம

**சாத்தலி** - வேதம

**சாத்தவி** - சததி

**சாத்தன்** - அருகன், புததன், ஒரு வனைக் குறிக்கச் சொலலும சொல், வாணிகக்கூட்டத் தலை வன்

**சாத்தா** - ஐயனுர்

**சாத்தானி** - கோயிலில பூமாலைத் தொண்டு செய்யும் வைணவன்

**சாத்தியம்** - சாதிக்கத்தக்கது, தீர்க்கக்கூடியது

**சாத்தியர்** - தேவருள் ஒருசாரார்

**சாத்திரம்** - சீலை

**சாத்து** - வாணிகக்கூட்டம்

**சாத்துக்கவி** - சிறப்புப் பாயிரக் கவி

**சாத்துதல்** - அணிதல், பூசுதல், அடைத்தல்

**சாத்துப்படி** - விக்கிரகத்துக்குச் செய்யும் அலங்காரம்

**சாத்துவர்** - புலி

**சாத்துவதி** - அறம் பொருளாகவும், தெய்வமானிடர் தலைவராகவும் வரும் நாடகவிருத்தி

**சாத்துவம்** - சாத்துவிகம்

**சாத்துவிகம்** - சத்துவகுணம்

**சாத்துறி** - உறிவகை

**சாத்தெறிதல்** - வணிகர் கூட்டத்தைக் கொள்ளையிடுதல்

**சாந்தகவிராயர்** - இரங்கேசவெண்பாவைப் பாடிய புலவர்

**சாந்தபனம்** - ஒருவிரதம்

**சாந்தம்** - அமைதி, பொறுமை. ஒன்பது இரசங்களுள் ஒன்று, குளிர்ச்சி, சந்தனம்

**சாந்தம்மி** - சந்தனக்கல்

**சாந்தலிங்கசுவாமிகள்**-17-ஆம் நூற்றாண்டிலிருந்த ஒரு வீரசைவ முனிவர்

**சாந்தன்** - அருகன், புத்தன்

**சாந்தாற்றி** - மயில்விசிறி, சிற்றாலவட்டம்

**சாந்தி** - அமைதி, தணிவு, பரிகாரம், விழா, பூசை

**சாந்திகலியாணம்** - பெண் பூப்படைந்தபின்பு கணவனுடன் சேர்த்தற்குச் செய்யும் சடங்கு

**சாந்திக்கூத்து** - தலைவன் முதலியோர் மனஅமைதி அடைதற்கு ஆடுங்கூத்து

**சாந்திரத்தீவு** - பரசுராமருக்கு உரியதான ஒரு தீவு

**சாந்திரம்** - சந்திரன் சம்பந்தமானது

**சாந்திரமாதம்** - சந்திரகதியைக் கொண்டு அளவிடப்படும் மாதம்

**சாந்திரானம்** - சந்திரநிலைக்கேற்ப [illegible] விக்குமுறை

**சாந்திராயணம்** - ஒருவிரதம்

**சாந்து** - சந்தனமரம், கலவைச் சந்தனம், விழுது, சுண்ணாம்பு

**சாந்துக்கோய்** - சாந்துப்பெட்டி

**சாந்தை** - பூமி

**சாந்தோக்கியம்** - உபநிடதங்களுள் ஒன்று

**சாபசரத்தி** - தவப்பெண்

**சாபம்** - சபித்துக் கூறும்மொழி, வில், தனுவிராசி, விலங்குக்குட்டி

**சாபலம்** - எளிமை

**சாபல்லியம்** - பயனுள்ளதாதல்

**சாபாலன்** - ஆட்டுவாணிகன்

**சாப்பறை** - சாவில் அடிக்கப்படும் பறை

**சாப்பாடு** - உணவு

**சாப்பை** - புற்பாய்

**சாமகண்டர்** - சிவன்

**சாமகானம்**, **சாமகீதம்** - சாமவேதம் பாடுகை

**சாமக்கிரியை** - உணவுப்பண்டம், உபகரணம்

**சாமணம்** - சாவணம்

**சாமந்தன்** - படைத்தலைவன்

**சாமந்தி** - பூஞ்செடிவகை

**சாமம்**-7½ நாழிகைகொண்ட கால அளவை, இரவு, சாமவேதம், பகைவனை வசப்படுத்தும் உபாயம், பசுமை, கருமை

**சாமரம்** - கழு, கவரி

**சாமரை** - சாமரம்

சாமர்த்தியம் - திறமை
சாமவேதம் - மூன்றும் வேதம்
சாமளம் - கருமை, பசுமை
சாமளை - பார்வதி
சாமன் - புதன், காமன்தம்பி
சாமானியம் - பொது, பெருந்தன்மையுடையது
சாமி - கடவுள், முருகன், அருகன், தலைவன், குரு, மூத்தோன், தலைவி, பொன், செல்வம், சாமை
சாமிநாதன் - முருகக்கடவுள்
சாமீகரம் - பொன்
சாமீபம்
சாமீப்பியம் } கடவுளை அணுகியிருக்கும் நிலை
சாமுசித்தன் - முற்பிறப்பில் பெற்ற ஞானத்துடன் பிறந்து சிவனிடத்தில் பக்திசெய்வோன்
சாமுண்டி - துர்க்கை
சாமுண்டிதேவநாயகர் - புறப் பொருள் வெண்பாமாலை உரையாசிரியர்
சாமுத்திரிகம்-அங்க இலக்கண நூல்
சாமை - தானியவகை
சாமோற்பலம் - யானை நுதலில் அணியும் சிந்தூரம்
சாமோற்பலை - யானை
சாம்பசிவன் - அம்மனோடு கூடிய சிவன்
சாம்பர் - சாம்பல்
சாம்பலடிப்பெருநாள் - கிறித்துவ திருநாட்களுள் ஒன்று
சாம்பலாண்டி - உடல்முழுவதும் நீறுபூசிய பரதேசி
சாம்பலுப்பு - மரவுப்பு
சாம்பல் - எரிப்பட்டநீறு, வாடற் பூ, முதுமை, நாவல்
சாம்பவம் - சைவமதபேதம்
சாம்பவன் - இராமாயணத்தில் கூறப்படும் கரடிவேந்தன்
சாம்பவி - பார்வதி
சாம்பவிதீட்சை - ஆசிரியன் பார்வையால் மாணாக்கனது பாசத்தைச் சேதிக்கும் தீட்சை
சாம்பன் - சிவன்
சாம்பான்-பறையர்பட்டப் பெயர்
சாம்பிராணி - ஒருநாடு, தூபவர்க்கம், மூடன்
சாம்பு - பறை, படுக்கை, புடைவை, பொன், நாவல்
சாம்புதல் - வாடுதல், கெடுதல், ஒடுங்குதல்
சாம்புநதம்
சாம்பூநதம் } மேருமலைக்கு வடக்கில் நாவற்சாறு பெருகி ஓடும் நதி, நால்வகைப் பொன்களுள் ஒன்று
சாம்ராச்சியம் - ஏகாதிபத்தியம்
சாயகம் - அம்பு, வாள்
சாயம் - நிறம்
சாயரட்சை - மாலைக்காலம், மாலைப்பூசை
சாயரி - பாலைப்பண்வகை
சாயல் - சாய்வு, இணைப்பு, நுணுக்கம், துயிலிடம், அழகு, நிறம், மேனி, ஒப்பு, நிழல், சார்பு, மென்மை, மேம்பாடு, அருள், மேம்பாடாகிய சொல்
சாயல்வரி - வரிப்பாட்டுவகை
சாயவேளாகொல்லி - பண்வகை
சாயனபோகம் - தீர்க்கரேகை
சாயனம்-கிரகபுடம், இரசாயனம், கள்
சாயாக்கிரகம் - இராகு கேதுக்கள்
சாயாகௌளம் - ஓர் இராகம்
சாயாதேவி-சூரியன் மனைவிகளுள் ஒருத்தி
சாயாநீர் - கானல்நீர்
சாயாபதி - சூரியன்
சாயாபுருடன் - நிழல்வடிவாகத் தோன்றும் புருடன்
சாயான்னம் - மாலைவழிபாடு

**சாயினகம்** - ஓந்தி
**சாயினம்** - மென்மையான மகளிர் கூட்டம்
**சாயுச்சியம்** - உயிர் கடவுளோடு ஐக்கியமாகும் நிலை
**சாயை** - நிழல், புகழ், பாவமம்,
**சாய்** - தட்டான்கோரை, செறும்பு நிறம், புகழ
**சாய்தல்** - கவிழ்தல், வளைதல, நடுநிதல், தோற்றேடுதல், நடுநிலை கோணுதல், சார்தல், தளர்தல,வருந்துதல,மெலிதல், வற்றுதல், அழிதல
**சாய்த்தல்** - சாயசெய்தல, ஓட்டுதல, கெடுத்தல், தோல்வியுறச் செய்தல, முறித்தல், மெய்ப்படுத்துதல், மூறறுவித்தல்
**சாய்ப்பாவை** - கோரைப்பாவை
**சாய்ப்பிடம்** - படை பின்வாங்கும் இடம்
**சாய்ப்பு** - தாழ்வு
**சாய்வு** - சரிவு, குறைவு, அழிவு
**சாரகம்** - தேன
**சாரங்கபாணி** - திருமால்
**சாரங்கம்** - வில், மான், வண்டு, ஓர் இராகம்
**சாரசம்** - வெண்ணரை, கொக்கு, தாமரை
**சாரணர்**-ஒற்றர், தூதுவர்,சமணரிலும பௌத்தரிலும சித்திபெற்றோர், பதினெண்கணத்துள ஒருவர், தேசவூழியத தொண்டா
**சாரதம்** - பூதம், இன்னேசை
**சாரதர்** - பூதகணத்தார்
**சாரதா** - சரசுவதி
**சாரதி** - தேர்ப்பாகன், புலவன்
**சாரப்பருப்பு** - காட்டுமாவிரை
**சாரம்** - மேலேறக்கட்டும்மரம், கிரகத்தின் இயக்கம், இரசம, இனிமை, மருந்து, சிறந்தது, வடித்தெடுத்தபகுதி, பயன், ஆறறல், மரவயிரம, வியபிசாரம, நவச்சாரம
**சாரமேயன்** - நாய்
**சாரல்** - கிட்டுகை, பக்கம், பக்கமலை, மழை, தூவானம, காந்தாரப்பண்
**சாரற்கட்டு** - கோடைக்காலத்தில மலையுச்சியில மேகங்கூடியிருக்கை
**சாரன்** - ஒற்றன்
**சாராம்சம்** - வடித்தெடுத்தபகுதி
**சாராயம்** - காய்ச்சிவடித்த மது
**சாரி** - வட்டமாயோடுகை, நடை, வாகனமீதுசெல்லுகை, இசைக்கருவி வகை, சூதாடுகாய், ஆடைவகை
**சாரிகை**-கதி, சுழல்காற்று, கவசம, சுவர் இறை, நாகணவாய்ப்புள
**சாரிகொள்ளுதல்** - நாட்டியத்தில இடம வலமாக ஆடுதல்
**சாரித்தல்** - கீழ்வீழ்தல
**சாரித்திரம்** - ஒழுக்கம்
**சாரிபை** - நன்னாரி
**சாரியன்** - ஒழுக்கமுடையவன்
**சாரியை** - சாரந்துவரும் இடைச்சொல், குதிரையின் சுற்றுவரவு, வீரனுடைய கதிவகை, ஆடல்வகை
**சாரீரம்** - பாடுதற்குரிய குரல
**சாரு** - அழகு, கிளி
**சாருகன்** - கொலையாளன
**சாருவாகன்** - சார்வாகன்
**சாரூபம்** } **சாரூப்பியம்** } கடவுளைப் போல வடிவம் பெறுகை
**சாரை** - பாமபு வகை
**சார்** - கூடுகை, இடம, பக்கம, வகை, தாழ்வாரம், அழகு, ஒரு மரம், தேர்
**சார்ச்சார்** - இடந்தோறும் இடந்தோறும

**சார்ச்சி** - சேருகை, வருகை, தொடர்பு, சார்விடம்
**சார்தல்**-சென்றடைதல், புகலடைதல், அடுத்தல், ஒத்தல்
**சார்த்தியளத்தல்** - ஒன்றோடு மற்றொன்றை ஒப்பிட்டளத்தல்
**சார்த்துதல்** - சார்ச்செய்தல், இணைத்தல்
**சார்த்துகவி** - பாட்டுடைத் தலைவன் பதியோடும் பேரோடும் சார்த்திப்பாடும் வரிப்பாட்டு வகை
**சார்த்தூலம்** - புலி
**சார்பிலார்** - பகைவர், முனிவர்
**சார்பு** - இடம், பக்கம், ஆதாரம், துணை, புகலிடம், பிறப்பு
**சார்புநூல்** - முதல் நூல் வழி நூல்களோடு பொருள் முடிவு ஒருபுடையொத்து ஒழிந்தன ஒவ்வாமையுடைய புடை நூல்
**சார்பெழுத்து** - குற்றியலுகரம், குற்றியலிகரம் முதலிய சார்பில் தோன்றும் எழுத்து
**சார்மணை** - சுவரோடு ஒட்டித் திண்ணையில் கட்டிய சாய்மானத் திண்டு
**சார்வபௌமம்** / **சார்வபூமன்** } எட்டுத் திக்கு யானைகளுள் ஒன்றாகிய வடதிசை யானை
**சார்வரி** - அறுபது ஆண்டுகளுள் ஒன்று
**சார்வாகம்** - உலகாயத மதம்
**சார்வாரம்** - கச்சின தலைப்பு
**சார்வு** - இடம், ஒட்டுத்திண்ணை, ஆதாரம், துணை, உபாயம், பற்று, அயலிடம்
**சால** - மிக
**சாலகடங்கடர்** - அரக்கர்
**சாலகம்** - சிலந்தி வலை, யாகபத்தினியின் நெற்றியிலணியும் அணிவிசேடம், சன்னல், அரும்பு
**சாலபஞ்சிகை** - மரப்பாவை
**சாலம்** - நடிப்பு, கூட்டம், சபை, சாலவித்தை, வலை, குறளை, சுவடு, மதில், ஆச்சா, மதில்
**சாலம்பம்** - பற்றுக்கோடு
**சாலர்** - நெய்தல நிலமாக்கள்
**சாலவம்** - ஐம்பத்தாறு தேசங்களுள் ஒன்று
**சாலவிருட்சம்** - ஆச்சா, தொண்டை
**சாலாதார்** - பெருமையில்லாதார்
**சாலாபோகம்** - அறச்சாலைகளுக்கு விடப்படும் இறையிலி நிலம்
**சாலாமிசிரி** - எகிப்து தேசத்துக் கிழங்கு வகை
**சாலி** - செந்நெல், நெற்பயிர்ப் பொது, புழுகுச்சட்டம், உடையான் உடையவள் என்னும் பொருளில் வரும் சொல், அருந்ததி, வேலமரம்
**சாலிகன்** - சாலியன்
**சாலிகை** - கவசம்
**சாலியன்** - நெசவு செய்யும் சாதியான்
**சாலிவாகனசகாப்தம்**-கி. பி. 78-ஆம் ஆண்டில் சைத்திரமாதத்தில் தொடங்கிச் சாலிவாகனன் பெயரால் வழங்கும் ஆப்தம்
**சாலிவாகனன்** - விக்கிரமாதித்தனுக்குப் பகைவன்
**சாலினி** - தேவராட்டி, அருந்ததி, பேய்ப்பீர்க்கு, கள்வாணிச்சி
**சாலுதல்**-நிறைதல், பொருந்துதல், முற்றுதல்
**சாலூரம்** - மேன்மை, தவளை
**சாலேகம்** - சாளரம், பூவரும்பு
**சாலேயம்** - செந்நெல் விளையும் நிலம்
**சாலை** - உணவு அளிக்கும் அறச்சாலை, மண்டபம், பள்ளிக்கூடம்

**சாலோகம்** - கடவுளுடன் ஓரிடத் துறைகை
**சால்** - தண்ணீர்ப் பானை, உழவு சால, குமபராசி
**சால்பு** - மேன்மை, நற்குணம, தன்மை, நிறைவு
**சால்புமுல்லை** - சான்றோருடைய அமைதி கூறும் புறததுறை
**சால்புளி** - முறைப்படி
**சால்வை** - மயிர்க் கமபளம
**சாவகக்குறிஞ்சி** - குறிஞ்சியாழத திறததுள ஒன்று
**சாவகநோன்பி** - இலலறததிலிருநது விரதங காபபோன்
**சாவகம்** - சாவாத்தீவு
**சாவகன்** - மாணுக்கன், சனி, சாவகக தீவினன்
**சாவகாசம்** - சௌகரியம
**சாவடி** - வழிப்போக்கா தங்குமிடம, வீட்டுக்கு முன்னுள்ள கொட்டகை
**சாவணம்** - கமமியர் கருவிவகை
**சாவணமாதம்** - 30 நாளகொண்ட சௌரமான மாதம
**சாவதானம்** - அவசரமின்மை
**சாவம்** - வில, சாபம, சாததீட்டு
**சாவரம்** - குற்றம், பாவம்
**சாவாமருந்து** - அமிழது
**சாவாவுடம்பு** - அழியாத புகழ
**சாவி** - மணிபிடியாமற்போன பயிர், திறவுகோல
**சாவித்திரி** - பிரமன் மனைவியருள் ஒருததி, சரசுவதி, காயத்திரி மநதிரம, சததியவான மனைவி
**சாவு** - மரணம், பேய்
**சாவேரி** - ஓர் இராகம்
**சாவேறு** - பகைஅரசரைச் சூழ்ந்து காககும் படைமீது ஒருமுகமாகப் பாய்ந்து ஊடறுத்துச் செல்ல முயன்று அங்கிலேயில் உயிர்துறததலேயே விரதமாகக் கொணட வீரா தொகுதி
**சாழல்** - பிரபநதவகை, மகளிர் விளையாட்டுவகை
**சாளை** - மகளிர் கைகொட்டி ஆடும விளையாட்டு
**சாளகம்** - இசைப்பாவுககுரிய சாதி ஓசை மூன்றுனுள ஒன்று
**சாளக்கிராமம்** - திருமாலுருவமாகக்கொண்டு பூசிததறகுரிய கலடகிச் சிலை
**சாளரம்** - சன்னல
**சாளர்** - செவவழியாழ்ததிறவகை
**சாளி** } வண்டு, பணப்பை,
**சாளிகை** } சாடி
**சாளுக்கியர்** - தக்கண தேசத்தை ஆறுவது முதல பதின்மூன்றாவது நூற்றாண்டு வரை ஆண்டு வநத ஓா அரச வகுப்பினர்
**சாளுவம்** - சாளவ தேசம்
**சாறணை** - பூடுவகை
**சாறு** - இலை பழம முதலியவறறின் சாறு, கள், மிளகுரசம, விழா, திருமணம, மரத்தின் குலை
**சாறுதல்** - நழுவுதல, வழுக்குதல், வடிதல்
**சாற்று** - ஓசை, விளம்பரப்படுததுகை
**சாற்றுதல்**-சொல்லுதல், புகழ்தல, அடிததல், நிறைத்தல், அமைததல, விளம்பரப்படுததுதல்
**சாற்றுவாய்**-உமிழநீர் வடியும்வாய்
**சானகம்** - வில்
**சானகி** - சீதை
**சானம்** - தியானம
**சானவி** - கங்கை
**சானி** - மனைவி
**சானு**-மலை, தாழ்வரை, முழந்தாள்
**சான்மலித்தீவு** - இலவந்தீவு
**சான்றாண்மை** - பெருந்தன்மை, பொறுமை, கள்ளிறக்குந் தொழில்

